# Testimonial.

*Neetinerivilakkam is a very useful book, being, in fact, an abridgment of "Valluvar Kural", the best code of Morals ever written in the Tamil Language. The Texts composed in Venba Metre by Kumarekuruparaswami, with comments written with ability by Mr. A. Kumaraswami-pillai, a well-known Tamil scholar, inculcate genuine moral principles without distinction of creed.*

*I recommend this little book to learners in our Tamil Schools.*

**C. W. Katirievel Pillai.**

*Jaffna*
*July 15th 1902.*

மகாமகோபாத்தியாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர்

# அநுக்கிரமணிகை.

# உபக்கிரமணிகை.

நீதிக்குரிய வழிகளை விளக்கிக் காட்டுதலுடைமைபற்றி இந்நூல் நீதிநெறிவிளக்கமெனப்பட்டது. நீதியாவது இன்பமடைதற்குக் காரணமாய்ச் செயப்படுவதாகிய முறை. இந்நூல் செய்தவர் திருநெல்வேலியைச் சேர்ந்த ஸ்ரீவைகுண்டமென்னும் நகரிலே அவதரித்துக் குமரகுருபரசுவாமிகளென்னும் பெயர்பெற்ற ஒரு முனிவர். இவர் இந்நூலன்றி வேறும் பலநூல்கள் செய்துவைத்தனர். அவை கந்தர் கலிவெண்பா, மீனாட்சியம்மைபிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மைகுறம், மதுரைக்கலம்பகம் முதலியன. அவையெல்லாம் சொற்சுவை பொருட்சுவைகளோடு கற்றோர்க்கு மகிழ்ச்சி பயக்குஞ் சம்ஸ்காரமுமுடையன.

இவர் மீனாட்சியம்மைபிள்ளைத்தமிழ் முதலிய சில பிரபந்தங்களை மதுரையிலே கொண்டுவந்து சுவாமிசந்நிதியிலே அப்பொழுதையரசனாகிய திருமலைநாயக்கனும் பிறருங்கேட்க அரங்கேற்றி அவ்வரசனாலே சம்மானமும் பெற்றவராய் அங்கேயிருக்கும் நாள்களிலே ஒருநாள் அவ்வரசன் உணவின்றி நெடுநேரமிருத்தல் கண்டு, "வகுத்தான் வகுத்தவை யல்லாற் கோடி தொகுத்தார்க்குந் துய்த்த லரிது" என்னுந் திருக்குறட்கவியை எடுத்துக் கூறினாரென்றும், அதனைக்கேட்ட அவ்வரசன் அதிசயமடைந்து வள்ளுவருடைய திருக்குறளின் அருமை பெருமைகளை உள்ளவாறறிந்து, அதன் சாரத்தையெடுத்துச் சுருக்கி ஒரு நீதிநூலாக்கித் தரவேண்டுமென்று பிரார்த்திக்க இந்நூலைச் செய்துகொடுத்தாரென்றுஞ் சிலர் கூறுவர். மீனாட்சியம்மைகுறத்தினிறுதியிலே அவ்வரசனுக்கும், அவன் செல்வத்திற்கும் இவரால் ஆசீர்வாதங் கூறப்பட்டது.

மீனாட்சியம்மைகுறம்.

சீர்வாழி தென்மதுரை மின்மலை ரருள்வாழி
கார்வாழி யங்கயற்கட் கண்ணிதிரு வருள்வாழி
ஏர்வாழி கச்சிநகர்த் திருமலைபூ பதிவாழி
பேர்வாழி யவன்செல்வம் பெரிதூழி வாழியவே

வள்ளுவருடைய திருக்குறளிலே ஆங்காங்குவரும் சொற்களும், சொற்றொடர்களும், பொருள்களும், ரீதிகளும் இந்நூலிலும் ஆங்காங்கு வருகின்றன. அவ்வாறுவருஞ் சொற்களாவன; ஊங்கில்லை, இவறன்மை, கடப்பாடு, பிறன்வரை என்பன முதலாயின. சொற்றொடர்களாவன; பரிந்தோம்பிக்காக்க, நோவதெவன், அறங்கடை, உய்த்துச்சொரிந்து என்பன முதலாயின. பொருள்களாவன; கல்வி, அரசு, அமைச்சு, முயற்சி, பொருள், இன்பம், மெய்யுணர்வு என்பன முதலாயின. ரீதிகளாவன; பித்துடையவல்லபிற, தாழப்பெறின், எண்மையவாயினும் என்பன முதலாயின. இவைகள் இங்குமங்கும் இலைப்புரைகிளைப்பார்க்கு நன்குபுலப்படுவனவேயாம்.

இந்நூலிலே எம்மதவாதிகளாயினுஞ் சம்மதமாகச் செய்தற்பாலனவாகிய காரியங்களும், தவிர்தற்பாலனவாகிய காரியங்களும், அவற்றின் பலாபலங்களும, அவைகளை உள்ளவாறுணருநெறியும், உணர்வோர் செய்யுந்திறமும், ஊரார் செய்யுந்திறமும், பிறவும் அநுபவங்களோடு உதாரணங்கள்காட்டிச் சுருங்கசசொலலன் முதலிய அழகுகளெல்லாம் பொருந்த வெண்பாயாப்பிலே பண்பாக விளக்கப்பட்டன. இவையெல்லாம் அறம், பொருள், இன்பம், வீடு என்னும நான்கும் பயப்பனவாயடங்கும.

முதற்பாகத்திலே கல்வியாலடையப்படுவனவாகிய பயன், சுகம், புகழ், அறிவு, ஒழுக்கம் முதலியன கூறுமுகத்தால் அறமும, அதன்பின் அரசு, அமைச்சு, முயற்சி, பொருளீட்டுநெறி முதலியன கூறுமுகத்தாற் பொருளும், பரதாரம்விரும்பாமை, கற்புடைமனைவியின்பம் முதலியன கூறுமுகத்தால் இன்பமும், அதன்பின் துறவு, தவம், மெய்யுணர்வு முதலியன கூறுமுகத்தால் வீடுமாக நான்குபொருள்களும் இந்நூலிலே நன்கு கூறப்பட்டிருக்கின்றன. மானுடரால் அவசியமடைதற்பாலனவாகிய அறம், பொருள் முதலிய நான்கையுந் திறம்பெறக்கூறும் இந்நூலை வெறுப்பவர் யாவர்!

ஆதலால் இந்நூல் தமிழ்நாட்டு வித்தியாசாலைகளிலே தவிராது கற்பிக்கப்படத்தக்க ஒரு நீதிசித்தாந்த நூலேயாம். இதுவும் பெரும்பாலும் உரைகொண்டே உணரத்தக்கது. எத்தனையோ கவிகள் உய்த்துணர்தற்பாலனவாய்ச் சூத்திரம்போலவுந் தோற்றுகின்றன. இவ்வாறே இந்நூலாசிரியர் தாமும் உய்த்துணரவைத்தல் கருதியே நாலாங்கவியிலே "எத்துணையவாயினுங்கல்வியிடமறிந் - துய்த்துணர்வில்லெனின்ல்லாகும்" எனக் கூறினர்போலும். இந்நூற்கு மிகப்பழைய ஒரு தாலபத்திரப் பிரதியும், ஒரு முத்திராக்ஷரப்பிரதியுமாக இரண்டுரைப்பிரதிகளகப்பட்டன. இரண்டு பிரதிகளையும் யாம் அநுசீலனஞ் செய்தபோது பலசொற்களும், பலசொற்றொடர்களும், பலகவிகளும் விபரீதவுரைகளையுடையனவாகத் தோன்றின, அவற்றுட் சில இங்கே காட்டப்படுகின்றன.

கவி.

க. புறங்கடை—தலைவாயில்.
உ. அகற்றும்—விசாலமாக்கும்.
ங. மாணவை—பெரியசபை.
ரு. இன்னலம்—இனியகுணம்.
சு. மாய்வனபோல்—அழிவனபோல்.
அ. அரிப்பரித்து—அரிப்பைச்செய்து
கூ. சீர்ப்பாடு—சிறப்பு.
க0. பிறவல்ல—வேறல்ல.
கக. கற்பன்றே—விவேகமல்லவா.
கஉ. முழுமணி—பருத்தமணி.
கங. கருத்தழிக—மனம்வருந்துக.
கரு. கல்வியுடைமை — கல்வியுடையராதல்.
கசு. மீச்செலவு—வரம்பிகந்தநடத்தை
கஅ. வியப்பிப்பான — மதிக்கவேண்டுவோன்.
உங. நகையினர்—சிரிப்போர்.
,, பேடு—அலி.
உஅ. மடிகொன்று—மடியைக்கொய்து
ஙஉ. யாதும்புகல—யாதுஞ்சொல்ல.
ஙங. பக்கத்தார்—அருகிலுள்ளோர்.

கவி,

சஅ. கடைபோகா—முற்றுப்பெறா.
ரு0. பான்மூளை—விதிமூளை.
ருங. கயத்தாழ்—மிக்க ஆழம்.
ருரு. வேர்ப்பார்—கோபிப்பார்.
ருசு. எய்யாவினை-பொருந்தாதசெயல்.
சுங. சிறுக—குறைவாக.
சுச. தாளூன்றி—முயன்று.
சுஅ. வாக்கின்பயன்— சொல்வன்மை.
சுகூ. எண்மையவாயினும் — எளியவேனும்.
எங. கண்ணின்றி- தாட்சிணியமின்றி.
எச. தீயன—தீமைதருவன.
அஎ. கும்பியில்—நரகில்.
அஅ. இணைவிழைச்சு — துணையாகிய பெண்புணர்ச்சி.
அகூ. பரபரப்பு—சோம்பின்மை.
கூக. நோனுமே—பொறுமல்.
கூஉ. புறம்பா - வெளிப்பட்டிருக்கின்ற.
கூஅ. மெய்யுணர்ந்தார்காப்பு- உண்மையறிந்தோர் புலனடக்குதல்.
கூகூ. துறைபோய-அறிவிலேவகைவந்த.

இவ்வுரைகளும் இவைபோன்ற பிறவும் நிகண்டுநூல்களுக்கும், நியாயநூல்களுக்கும், இலக்கணநூல்களுக்கும், வள்ளுவர் குறளின் பரிமேலழகருரை முதலிய உரைகட்கும் மாறுபட்டனவாக நம்புத்திக்குத் தோன்றியபடியால் இப்போது வேறுரை எழுதப்பட்டன. வேறுரை கூறுதற்குக் காரணமான நியாயமும், இலக்கணமுடிபுகளும் பிறவும் உரைக்கப்புகின் மிகப்பரக்குமென்றஞ்சி எழுதப்பட்டில. அவசியங்கூறற்பாலனவாகிய சொன்முடிபு, அசை முதலியவற்றுள்ளும் பல கூறப்படவில்லை. அதுசிலஞ்செய்வோர் அவ்வக்கவிகளில் அறியக்கடவர். வேறு நீதிநூற் பிரமாணங்களுஞ் சான்றாகச் சிலகவிகளிலே சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஏட்டுப்பிரதியுரையும் பலவிடங்களில் உபகாரமாயிற்று.

சுன்னாகம்
சுபகிருதுஹு ஆனிமீ. }

இங்ஙனம்,
அ. குமாரசுவாமிப்பிள்ளை.

(1902)

———

# அருஞ்சொற்பொருள்கோள்.

அகப்பகை—உட்பகை.
அகற்றுதல்—பெருகச்செய்தல்.
அந்தப்புரம்—அரசன் மனைவியிருக்கும் வீடு. அந்தர்-உள். புரம்-வீடு.
அரிப்பு—தட்டாரசாலையிற் சிதறுண்ட பொற்பொடி. அரித்தெடுக்கப்படுதலின் அரிப்பெனப்பட்டது.
அறங்கடை—பாவம். அறத்தினின்று நீக்கப்பட்டமையின் அறங்கடையெனப்பட்டது. அறம்-தருமம். கடை-கடியப்பட்டது. இது கடியென்பதினின்று பிறந்தது. கடி-களைதல்.
அறிமடம்—அறிந்துமறியார்போன்றிருத்தல். அறி-அறிதல். மடம்-அறியாமை.
ஆள்வினை—முயற்சி. ஆளப்படும் வினையென்றவாறு. வினை-தொழில்.
இலம்பாட்டார்—வறியவர். இலம்பாடு-வறுமை.
உதி—பொருந்துமாறு. ௧௦௧.
உய்த்துணர்வு—சொற்களைக் கொண்டுபோய்ச் சோதத்தறிதல், ௨. புத்தியை நூல்களிலே செலுத்தி ஆராய்ந்து பொருந்துமாறறிதல். ௫.
எக்கழுத்தம்—இறுமாப்பு, தலையெடுப்பு. எ-உயர்ச்சி. கழுத்து-தலை. அம்-ஒரு வினைமுதற்பொருள் விகுதி. "எள்ளினாகட்கேக்கழுத்தம்" எனனுஞ் சிந்தாமணியுரையாலும் இப்பொருள் துணியப்படும்.
ஐயம்—பலதலையாயவுணர்வு. ௧௦௧.
ஒண்மை—நன்மை. ௬௮.
கட்டுரை—உறுதிவார்த்தை. கடியென்னும் உரிச்சொல் உரை என்பதனோடு புணரும்போது விகாரமாயிற்று. கடி-மிகுதி.
கடப்பாடு—தவிராது செய்தற்பாலது, முறைமை.
கடு—௧. கடுஞ்சொல்லு. ௫௬. ௨. உறைப்புள்ள பதார்த்தம். ௮௦. இது கடியென்னும் உரிச்சொல்லினின்று பிறந்தது.
கண்கூடு—பிரத்தியக்ஷம். கூடு-கூடுதல்
கல்வி—கற்கப்படுவது.
கற்பு—கல்வியறிவு.
களைகண்—இடர்களைதலுடையது.
குமபி—சேறு.
குய்யம—இரகசியம், வஞ்சகம். இது குஹ்யம எனனும் வடமொழித்திரிபு.
கைத்து—பொருள், கையிற்பொருந்துவது.
கைவருதல்-கையில்வருதல், வசமாதல
சீர்ப்பாடு—சிறப்பாதல.
சுட்டு—நனகுமதிப்பு.
செஙகோன்மை—நீதி.
செலவு—வழி.
தாக்கணங்கு—இலக்குமி, தகுதியுடைய பெண்.
நட்பு—நண்பன்.
நகையினர்—ஒளியுடையவர், கீர்த்தியுடையவர்.
நாண்—தகாதகாரியத்திலே மனம் ஒடுஙகுதல்.
பக்கத்தார்—அமாத்தியர்.
பகை—விரோதி, விரோதம்.
பார்வை—கண்ணோட்டம்.
பிழைப்பாடு—பிழைபடுதல்.
பீழை—துன்பம். இது பீடை என்னுஞ் சொல்லின விகாரம்.
புக்கில்-வீடு. புகு-பகுதி. இல்-ஒருவிகுதி
பூத்தல்—உண்டாதல்.
போக்கு—குற்றம்.
மடுத்தல—இடைப்படுத்தல்.
மறை—இரகசியம்.
முழுமணி—மாணிக்கம்.
யாத்தல்—பிணித்தல்.
வாய்தல்—நேர்படல்.
வீடு—முத்தி. இருவகைப்பற்றினையு முற்றவிடுதலுடையதென்பது பொருள்
வெங்காரம—ஒரு மருந்துச்சரக்கு, அது, வெம்மையுடைய ஒருவகையுப்பு. காரம்-உப்பு.
வெள்ளம்—ஒருதொகையெண்.
வேர்ப்பு—கோபம்.

உ

# நீதிநெறிவிளக்கவுரை.

## கடவுள்வாழ்த்து.

நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே
வழுத்தாத தெம்பிரா னன்று.

(இ-ள்.) இளமை நீரில் குமிழி - இளமைப்பருவம் நீரிலே தோன்றுங் குமிழிபோன்றழியும்—நிறை செல்வம் நீரில் சுருட்டு நெடுந்திரைகள் - பெருஞ் செல்வம நீரிலே சுருளுதலையுடைய பெருந்திரைகள் போன்றழியும—யாக்கை நீரில் எழுத்தாகும் - சரீரம் நீரிலே எழுதும் எழுத்துப்போன்றழியும்—நமர்காள் எம்பிரான் மன்று வழுத்தாதது என - நம்மவர்களே! நீவிர் எம்பெருமானுடைய சபையைத் துதியாது தாமதித்தற்குக் காரணம் யாது? எ-று.

நம்மவர்களே! இளமை, செல்வம் முதலியவற்றால் வரும் அற்பவின்பத்தினை நிலையென்றலையாது நம்பெருமானுடைய சபையைத்துதித்துப் பேரின்பம்பெறக் கடவீரென்பது கருத்து.

நமரங்காள் என்புழி அம் சாரியை. கடவுளை வணங்கிப் பெற்றுக்கொள்ளும் இன்பமொன்றுமே அழிவற்ற செல்வம் என்பதும், இளமை முதலியன அழியுமியல்பினவாய்த் துன்பங்கொடுப்பன என்பதும் பலநூல்களுக்கு மொத்த துணிபு. 'எம்பிரானல்கும்-வீடேயலாற் றுன்பறுமாக்கம்வேறுண்டோ'' என்பது கந்தபுராணம். ''இளமையு நிலையாவா லின்பமு நின்றவல்ல-வளமையுமஃதேயால் வைகலுந் துன்பவெள்ளம'' என்பது வளையாபதி.

## கல்வியாலாதம்பயன்.

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை.

(இ-ள்.) அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும் - தருமமும் பொருளும் இன்பமும் மோட்சமுமாகிய நான்கினையுங் கொடுக்கும்—புறங்கடை நல்லிசையும் நாட்டும - புறத்திலே நற்கீர்த்தியையும் நிலைப்படுத்தும்—உறும் கவலொன்று உற்றுழியும் கைகொடுக்கும் - வருதற்குரிய கவலையொன்று வந்துழியும் உதவிசெய்யும்—சிற்றுயிர்க்கு கல்வியின் ஊங்கு உற்றதுணை இல்லை - (ஆதலாற்) சிறிய மக்களுயிர்கட்குக் கல்வியினும் மேம்பட்டுச் சிறந்த துணை வேறில்லை. எ-று.

அவசியம் பெறற்பாலனவாகிய அறம் பொருள் இன்பம் வீடென்பவைக ளைக் கொடுத்து நற்புகழையும் நாட்டி மனக்கவலையையும் மாற்றுதலாற் கல்விப் பொருளே மக்களுயிர்க்கு மிக்குயர்ந்த துணையென்பது கருத்து.

புறங்கடை என்புழிக் கடை என்பது ஏழாம்வேற்றுமையுருபு. இங்கே புற மென்றது கற்றுவல்லோனிருக்கும் வீட்டுக்குப்புறமாகிய இடத்தை. கவல-கவலை. கவலையாவது இட்டமுள்ள ஒன்றினை இழத்தன்முதலியவைகளான் மனத்திலே தோன்றும் வியாகுலம். கவலையுற்றுழிக் கைகொடுத்தலாவது இடையேவந்த இடுக்கணைக்கெடுத்துச் செயற்பாலதிதுவென அறிந்து மயங்காதற்குக் காரண மான அறிவினையுண்டாக்குதல். "வெறுமையான மடமைதன்னொடு வருந்திநெஞ் சழியுங் காலை - உறுதிசெய் துணையாங் கற்ற வுணர்வினை யளாக்கும்" என்பது விநாயகபுராணம். (௧)

## கல்வியாலாகுமின்பம்.

தொடங்குங் காற் றுன்பமா யின்பம் பயக்கும்
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி—நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது.

(இ-ள்.) மடம் கொன்று அறிவு அகற்றும் கல்வி - அறியா மையையழித்து அறிவினைப் பெருகச்செய்யுங் கல்வியானது—தொட ங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும் - கற்கப் புகுங் காலத்திலே துன்பங் கொடுக்குமியல்பினதாய்ப் பின்னர் இன்பங்கொடுக்கும்—நெ டுங் காமம் முன் பயக்கும் சில் நீர இன்பத்தின் பின் பயக்கும் பீழை பெரிது - மிக்க காமமானது முன்னாகக் கொடுக்கின்ற அற்பத்தன்மை யுடைய இன்பத்தினும் பின்னாகக் கொடுக்கின்ற துன்பம் பெரியதா கும். எ-று.

கல்வியாலுண்டாகும் இன்பமே மிகச் சிறந்ததென்பது கருத்து.

கற்கப் புகும்போது நீங்காதிருந்த அறிவின்மையே துன்பம்பயத்தற்கும், கற்றுணர வுணரத் தோன்றுமறிவுண்மையே இன்பம்பயத்தற்கும் காரணமாதலைப் புலப்படுத்துதற்கே "மடங்கொன்றறிவகற்றுங்கல்வி" என்றார். எல்லாப்போகங் களினும் தான் மிக்க விருப்பங்கொடுத்தல்பற்றி மகளிர்போகம் நெடுங்காமமெ னப்பட்டது. முற்றிழாய் என்பது மகடூஉமுன்னிலை. தொழின்முற்றிய இழை யையுடையவளே யென்பது பொருள். இழை-ஆபரணம். இழாயென விளியு ருப்பெற்றது. (௨)

## நற்சவையைச்சிறப்பித்தல்.

கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே தீங்கவியாச்—சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவையை மண்ணுறுத்துஞ்
செல்வமு முண்டு சிலர்க்கு.

(இ-ள்.) கல்வியே கற்புடை பெண்டிர் - கல்விதானே கற்புடை மனைவியராகவும்—தீங்கவி ஏ பெண்டிர்க்கு செல்வம் புதல்வன் - இனிய

கவிதானே அம்மனேவியர்க்கு (நற்குணம் முதலிய) செல்வத்தினே யுடைய புத்திரனுகவும்—சொல் வளம் மல்லல் வெறுக்கையா - அக் கவியிலமைந்த சொற்களின் சிறப்பே பொலிவையுடைய திரவியமா கவுங் கொண்டு—மாண் அவையை மண்ணுறுத்தும செல்வமும் சில ர்க்கு உண்டு - நற்சவையை அலங்கரிக்கின்ற செல்வமும சிலரிடத்தி லே உள்ளதாகும். எ-று.

கல்வியைச் செவ்வேகற்று நல்லிசையோடு சொல்வலியுமமையக் கவிசெய் யும் வன்மை எல்லார்க்குங் கிடையாதென்பது கருத்து.

புகழும் பொருளும் பிறவும் பெற்று மேம்படுதற்குக் காரணமாதல்பற்றிக் கல்வியே கற்புடைப்பெண்டிர் எனவும், சித்திரித்துச் சவையிலே வைக்கப்ப ட்ட பொருள் பார்ப்பவர் மனத்தைக் கவர்ந்து சிறப்பித்தல்போல நற்கவிஞருங் கற்ருேர் மனத்தைக் கவர்ந்து சிறப்பித்தல் பற்றி மாணவையை மண்ணுறுத் தும் எனவுங் கூறினர். நற்சவையாவது "புகழுந் தருமநெறி நின்ருேர் பொய் காமம் - இகழுஞ் சினஞ்செற்ற மில்லோர் - நிகழ்கலேகள் - எல்லாமுணர்ந்தோ ரிருந்தவிடம்" என்பது வெண்பாப்பாட்டியல். (௩)

கல்வியைச்சிறப்பிப்பன.

எத்துணைய தாயினுங் கல்வி யிடமறிந்
துய்த்துணர் வில்லெனி னில்லாகும்—உய்த்துணர்ந்துஞ்
சொல்வன்மை யின்றெனி னென்ளு மஃதுண்டேற்
பொன்மலர் நாற்ற முடைத்து.

(இ-ள்.) கல்வி எத்துணையதாயினும் - (ஒருவனிடத்துள்ள) கல் வி எத்துணைப் பெருக்கமுடையதாயினும்—இடம் அறிந்து உய்த்துண ர்வு இல்லெனின் இல்லாகும் - இடத்தினேயறிந்து சொற்களைக் கொ ண்டுபோய்ச் சேர்த்துப் பொருள்கொள்ளு முணர்வில்லேயாயின்; (அக் கல்வி அவனிடத்) தில்லே யென்று எண்ணப்படும்—உய்த்துணர்ந்தும் சொல்வன்மை இன்றெனின் என்ளும் - அவ்வாறே உய்த்துணர்ந்த விடத்தும் வாக்குவன்மை இல்லேயாயின்; அதனுல் யாதுபயனுளதா கும்?—அஃது உண்டேல் பொன்மலர் நாற்றமுடைத்து - வாக்குவன் மையுமுளதாயின்; பொன்னுலாய பூவானது பரிமளமுமுடையதாயின் அதனே ஒக்கும். எ-று.

பொற்பூவானது பரிமளமுமுடையதாயின்; எவ்வாறு சிறக்குமோ அவ்வா றே உய்த்துணர்வுஞ் சொல்வன்மையுமுடையவனுடைய கல்வி சிறக்குமென்பது கருத்து.

இவன் யாதுமறியானென்று யாவராலு மிகழப்படுதல்பற்றி இல்லாகும் என் றும், யாதும் பயன்படாமைபற்றி என்ளும் என்றுங் கூறினர். உய்த்துணர்வு பொன்மலருக்கும் அதனேடு சொல்வன்மை அம்மலர் பரிமளமுடைமைக்குஞ் சமமெனக் கொள்க. உய்த்துணர்வு என்பதற்குப் புத்தியை நூல்களிலே செலு த்தி ஆராய்ந்து பொருந்துமாறறிதலென்பதும் பொருந்தும்.

## சவையஞ்சுவார்கல்வி.

அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லார்
அவையஞ்சா வாகுலச் சொல்லும் — நவையஞ்சி
ஈத்துண்ணார் செல்வமு நல்கூர்ந்தா ரின்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று.

(இ-ள்) அவை அஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும் - சபையிலே எடுத்துச்சொல்லுதலையஞ்சி உடம்பு நடுங்குவோருடைய படிப்பும் — கல்லார் அவையஞ்சா ஆகுலச்சொல்லும் - மூடர் சபையை அஞ்சாது பேசும் ஆரவாரச் சொற்களும் — நவை அஞ்சி ஈத்து உண்ணார் செல்வமும் - பழிபாவங்களாகிய குற்றங்களைச் சாராது தேடி நல்வழியிற் கொடுத்துத் தாமு மனுபவியாதவருடைய செல்வமும் — நல்கூர்ந்தார் இன்னலமும் - வறியவருடைய இல்லாளின் நன்மையும் — பூத்தலின் பூவாமை நன்று - உண்டாதலினும் உண்டாகாதிருத்தல் உத்தமமாகும். எ-று

சபையஞ்சுவார் கல்வியினாற் சிறிதும் பயனில்லையென்பது கருத்து.

சொல்லக்கருதிய சபையஞ்சுவார்கல்வியோடு பெரிதும் அகன்குணத்தை யுடைய ஆகுலச்சொன்முதலியவைகளும் உடன்வைத்துக் கூறப்பட்டமையால் இது பழிப்பொப்புமைக்கூட்டமென்னுமணி. தம்மைப் பிறர் மதித்தல் வேண்டிச் சொல்லப்படுதலின் ஆகுலச்சொல் என்றார். பாவத்தால் வந்த பொருளைக் கொடுத்தலும், அறஞ்செய்தற்குக் காரணமான தன்னுடம்பை உண்ணாது வாட்டுதலும் தருமமாகா. (௫)

## கல்வியாலாம்புகழ்.

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான் — மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு.

(இ-ள்) கலைமகள் வாழ்க்கை முகத்ததெனினும் - சரசுவதியின் வாழ்வு முகத்தினிடத்துத் தங்கப் பெறினும் — மலரவன் வண்டமிழோர்க்கு ஒவ்வான் - பிரமதேவர் சிறந்த தமிழறிஞர்க்குச் சமமாகமாட்டார் — மலரவன் செய் வெற்றுடம்பு மாய்வன - பிரமதேவராற் செய்யப்பட்ட வெறிய உடம்புகள் அழியுந்தன்மையுடையனவாகும் — இவர் புகழ்கொண்டு செய்யும் உடம்பு மாயா - தமிழறிஞர் புகழாற் செய்யும் உடம்புகள் அழிதன்மாலையவல்ல எ-று

தமிழ்ப்புலவர் பிரமதேவரினும் மிக்கவரென்பது கருத்து.

பிரமதேவருக்குந் தமிழ்ப்புலவர்க்குந் தொழில்பற்றி வேற்றுமைகூறுதலால் இது தொழில்வேற்றுமையணி. மண் நீர் முதலிய பூதங்களாலாயதென்பது அறிவித்தற்கு வெற்றுடம்பென்றார். போல் அசை. (௬)

சபையிலுதவாக்கல்வி.

நெடும்பகற் கற்ற வவையத் துதவா
துடைந்துளா ருட்கு வருங்கல்வி—கடும்பகலில்
ஏதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே
தீதென்று நீப்ப ரிதால்.

(இ-ள்) நெடும்பகல் கற்ற அவையத்து உதவாது - பலநாளாகத் தம்மால் படிக்கப்பட்ட நூல்கள் சபையிலே எடுத்துச் சொல்லுதற்குக் கைகூடப்பெறாமல்—உடைந்துளார் உட்கு வரும் கல்வி - தோல்வியடைந்தவருடைய அஞ்சுதலைக் காட்டும் கல்வி—கடும் பகலில் ஏதிலான்பால் கண்ட இல்லினும் பொல்லாதே - (பசிப்பிணியால் வருந்திச் செல்லும்) உச்சிக்காலத்திலே (அட்டிற்றொழிலும் விட்டு) அயலவன்பால் வசப்பட்டிருக்கக்கண்ட மனையாளினும் தீயதாகும்—தீது என்று நீப்பு அரிது - (ஏனெனின்; அவளைத் தீயவளென்று நீக்குமாறு போல) தன்னைத் தீயதென்று நீத்தற்கரியது. எ-று.

கற்கப்பட்ட நூல்களைப் பலமுறையும் நினைத்து மனத்திலே அமைத்திருத்தல்வேண்டும் என்பது கருத்து.

உட்கு - அச்சம். அது நடுக்க வியர்த்தல் முதலிய பற்றி அறியப்படுவது. பெரிதும் விளக்கமுடைமைபற்றி உச்சிக்காலம் கடும்பகலெனப்பட்டது. கடி - விளக்கம். வருந்தித் தேடிவைத்திருந்தும் உற்றசமயத்தி லுதவாமைபற்றிப் பொல்லாதே என்றார். (எ)

கற்றவைகளைக்கைவிடுதல்.

வருந்தித்தாங் கற்றன வோம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் றொடங்கல்—கருந்தனங்
கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல்.

(இ-ள்) தாம் வருந்தி கற்றன ஓம்பாது - (ஒருவர்) தாம் பலநாளாக வருந்திக்கற்ற நூல்களைப் பலமுறையும் நினைத்துப் பேணிக்கொள்ளாமல் விட்டு—மற்றும் சில பரிந்து கற்பான் தொடங்கல் - வேறுஞ் சில நூல்களை வருந்திக் கற்கும்படி தொடங்குதல்—கைத்தலத்த கருந்தனம் உய்த்துச் சொரிந்திட்டு - கையிலுள்ள திரளான பெரும் பொன்னைக் கொண்டுபோய் வீசிவிட்டு—அரிப்பு அரித்து எய்த்து பொருள்செய்திடல் - (அக்கசாலையினின்றுஞ் சிதறி) மணலோடு கலந்துகிடக்கும் பொற்பொடிகளை அரித்தெடுத்துப் பிரயாசப்பட்டுத் திரட்டிய பெரும்பொன்னுக்க முயலுதலை ஒக்கும். எ-று.

வருந்திக்கற்ற நூல்களை மறக்கவிட்டு வேறுநூல் கற்கப்புகுதல் மிக்கபேதைமை என்பது கருத்து. இதுபற்றியே இலக்கணக்கொத்து நூலாரும் "ஒருவதிற் கருத்தினை மட்டுப்படுத்தி - வரத்திற் சிரத்தையைச் சிந்தாதிறக்குக" என்றார்.

அரிப்பு - மண்ணோடு கலந்துகிடக்கும் பொற்றூள்; அரித்தெடுக்கப்படுதல் பற்றி அரிப்பெனப்பட்டது. சிறிது சிறிதாக அரித்துத் திரட்டுதல்பற்றி எய்த்துப்பொருள்செய்திடல் என்றார். ஆங்கு - அசை. (அ)

வறியவர்கல்வி.

எனைத்துணைய தேனு மிலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலதாம்—மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமக னல்லறம
பூண்ட புலப்படா போல்.

(இ-ள்.) மனைத்தக்காள் - மனையாட்டி—மாண்பிலளாயின் - மனையறத்திற்குத்தக்க நற்குணநற்செயல்களில்லாதவளாயின்;—மணமகன் பூண்ட நல்லறம புலப்படாபோல் - நாயகனாலே செயயும்படி எடுத்துக்கொள்ளப்பட்ட நல்லதருமங்கள் நன்குசெய்யப்பட்டனவாய் விளங்கமாட்டாமைபோல—இலம்பாட்டார் கல்வி - வறியவரிடத்துள்ள கல்வி—எனைத்துணையதேனும் தினைத்துணையுஞ் சீர்ப்பாடிலதாம் - எத்துணைப்பெருமையுடையதாயினும் தினையரிசியினளவேனுஞ் சிறப்புடையதாகி விளங்கமாட்டாது. எ-று.

வறியவர்கல்வி சிறிதும் பிரகாசிக்கமாட்டாதென்பது கருத்து.

நற்குணங்களாவன வறியார்மாட்டருளுடைமை, நாயகன்முனியினு மன்பு நீங்காமை, முதலாயின. நற்செயல்களாவன "சிறுகாலையட்டில்புகல், அருத்தியுறச்சமைத்தல், சுவைதிருத்தியூட்டல், மறுகாலையென்னுது விருந்தழைத்தல்" முதலாயின. நல்லறமாவது அருந்தவர் விருந்தர் முதலியோரைப் பேணுதல். அது, இந்நூலாசிரியர் கூறிய "நற்குணநிறைந்த கற்புடை மனைவியோடன்புமருளுந்தாங்கி யின்சொலின் - விருந்து புறந்தந் தருந்தவர்ப் பேணி யையவகை வேள்வியுமாற்றி" என்னும் சிதம்பரமும்மணிக்கோவையானும் பெறப்படும். (கூ)

கல்லியறிவின்மை.

இன்சொல்லன் றாழ்நடைய னாயினுமொன் றில்லானேல்
வன்சொல்லி னல்லது வாய்திறவா—என்சொலினுங்
கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன்ஞாலம்
பித்துடைய வல்ல பிற.

(இ-ள்.) இன் சொல்லன் தாழ் நடையனாயினும் ஒன்று இல்லானேல் - (ஒருவன்) இனிய சொற்களைச் சொல்வோனாய்ப் பணிவுடையனாயினும பொருள் சிறிதுமில்லாதவனாயின்;—கடல் ஞாலம் - கடலாற் சூழப்பட்ட பூமியிலுள்ள சனங்கள்—வன் சொல்லின் அல்லது வாய் திறவா - (அவனோடு) கடுஞ்சொற்கொண்டு பேசுவாரன்றி இன்சொற்கொண்டு பேசார்—என் சொலினும் கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும் - யாதுதான சொன்னாலும் செல்வமுடையவனது காலின்கீழமைந்து ஒடுங்கிக்கிடப்பார்கள்—பித்துடைய - (அச்சனங்களே) மயக்கவுணர்வுடையவர்களாவர்—பிற அல்ல - மற்றையன மயக்கவுணர்வுடையனவாகா. எ-று.

உலகத்திப சனங்கள் நற்குணநற்செயலினராயினுஞ் செல்வருக்கமைந்து நடப்பார்களென்பது கருத்து.

இன்சொல் - கேட்பார்க்கு மகிழ்ச்சியை விளைவிக்கும் மதுர வார்த்தை. தாழ்நடையாவது எதிர்கொளல், இருக்கைவிட்டெழுதல், வணங்குதல் முதலியன. வன்சொல் - கேட்போர்க்கு வெறுப்பினை விளைவிக்குங் கடுஞ்சொல். கடிந்துபேசினுங் கைவிடாரென்பது தோன்ற என்சொலினுமெனவும், நல்லதன்பாலுள்ள நன்மையுந் தீயதன்பாலுள்ள தீமையுமுள்ளவாறு பிரித்துணராமைபற்றிப் பித்துடைய எனவுங் கூறினர். (௧௦)

## கல்லாதவர்செயல்.

இவறன்மை கண்டு முடையாரை யாருங்
குறையிரந்து குற்றேவல் செய்ப—பெரிதுந்தாம்
முற்பக னோலாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று.

(இ-ள்.) இவறன்மை கண்டும் - உலோபகுண முடைமையை அறிந்திருந்தும்—உடையாரை யாரும் குறையிரந்து குற்றேவல் பெரிதும் செய்ப - செல்வரைப் பின்சென்று யாவரும் குறைகூறி யாசித்து நின்று பெற்றுச் சிறிய ஏவல்களையும அதிகமாகச் செய்வார்—தாம் முற்பகல் நோலாதார் நோற்றாரை பின்செல்லல் கற்பு ஏ - தாம் முன்னாளிலே (பொருள் பெறுதற்கேற்ற) தவஞ்செய்து வையாதவர் (அது பெற்றதற்கேற்ற) தவஞ்செய்து வைத்தவரைப் பின்சென்று நடத்தல் கல்வியறிவாலாய செயலேயாம்—கல்லாமை அன்று - கற்றுணராமையாலாய செயலன்று. எ-று.

உலோபகுணமுடையவராயினும் செல்வர்களை யாவரும் பின்சென்று தாமே விரும்பி ஏவல்களைச்செய்வாரென்பது கருத்து.

இவறன்மை - பொருளை விடவேண்டுமிடத்து விடாது பற்றுதலைச்செய்யுமுள்ளம். இதனை வடநூலார் உலோபமென்பர். அன்று - அசை. உலோபிகளைப் பின்செல்வோர் புகழ்வதுபோலப் பழிக்கப்பட்டவாறுணர்க. (௧௧)

## கல்வியழகு.

கற்றார்க்குக் கல்வி நலனே கலனல்லான்
மற்றோ ரணிகலம் வேண்டாவா—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார்.

(இ-ள்.) கற்றார்க்கு கல்வி நலனே கலன் அல்லால் மற்று ஓர் அணிகலம் வேண்டாவாம் - கற்றுணர்ந்தோருக்குக் கல்வியழகே ஆபரணமாகும் அதுவன்றி வேறோராபரணம் வேண்டப்படுவதில்லை—உற்ற முழுமணி பூணுக்கு பூண் வேண்டா - மிக்க மாணிக்கரத்தினம் அழுத்திச் செய்யப்பட்ட ஆபரணத்திற்கு அழகுசெய்யும்படி வேறாபரணம் வேண்டப்படுவதில்லை—அழகுக்கு அழகுசெய்வார் யார் - அழகினுக்கு அழகுசெய்பவர் யாவருமில்லை. எ-று.

கற்றோருக்குக் கல்வியழகே ஆபரணம்போலச் சிறப்புச்செய்யுமென்பது கருத்து.

"குஞ்சியழகுங் கொடுந்தானைக் கோட்டழகு மஞ்சளழகு மழகல்ல- நெஞ்சத்து நல்லம்யா மென்னு நடுவுநிலைமையாற் கல்வி யழகே யழகு" என்பது நாலடியார். முழுமணி - மாணிக்கம். (கஉ)

கல்விச்செருக்கு.

முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉங்
கற்றன மென்று களியற்க—சிற்றுளியாற்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னால்.

(இ-ள்.) முற்றும் உணர்ந்தவர் இல்லை- நூல்களெல்லாவற்றையுங் கற்றுணர்ந்தவா யாவருமில்லை—முழுவதூஉம் கற்றனம் என்று களியற்க - நூல்களெல்லாவற்றையும கற்றுணர்ந்துவிட்டோமென்று செருக்குக்கொள்ளாதொழிக—சிற்றுளியால் கல்லும் தகரும் - ஒரு சிறிய உளியினாலே பெரிய மலைகள் தாமும் தகர்க்கப்பட்டழியும—கொல லுலை கூடத்தினால் தகரா - (அம்மலைகள்) கொல்லனுலைக்களத்திற் செய்யப்பட்ட பெரிய சம்மட்டியினாலே தகர்க்கப்பட்டழியமாட்டா. எ-று.

நூல்களெல்லாவற்றையுங் கற்றுணர்ந்துவிட்டோமென்று செருக்குறுதலாகாதென்பது கருத்து.

கல்வி பலவாதலுங் கற்பவர்நாள் சிலவாதலும்பற்றி முற்றுமுணர்ந்தவரில்லையென்றார். "கல்விகரையில கற்பவர்நாள்சில" என்பது நாலடியார். பெருங்கல்வியுடையவனால் வெல்லப்படாத ஒருவனை அற்பக் கல்வியுடையவன்றானும் வெல்லுவானென்பது புலப்பட இருப்புச்சம்மட்டியினாலே உடைக்கப்படாத மலை ஒரு சிற்றுளியால் உடைக்கப்படுமென்றார். "கடலேயனையமயாங் கல்வியாலென்னு - மடலேறனையசெருக்காழ்த்தி - விடலே" என்பது நன்னெறி. கனங்குழாய் என்பது மகடூஉமுன்னிலை. கனவியகுழையாளே என்பதுபொருள்.

கற்றதுசிற்றெனக்காணல்.

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க—தம்மினுங்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே யிவர்க்குநா மென்று.

(இ-ள்.) தம்மின் மெலியாரை நோக்கி தமது உடைமை அம்மா பெரிதென்று அகமகிழ்க - (நம்மிடமுள்ள செல்வம் மிக அற்பமேயென்று வருந்துவோர்) செல்வத்தினாலே தம்மினும் அதிகங் குறைந்தவரைப்பார்த்துத் தம்முடைய செல்வம் மிகப்பெரியதென்று மனமகிழக்கடவர்—தம்மினும் கற்றாரை நோக்கி - (அதிகங் கற்றேமென்பவர்) தம்மினும் அதிகங்கற்றுணர்ந்தவரைப் பார்த்து—நாம் கற்றதெல்லாம் இவர்க்கு எற்றே என்று கருத்தழிக - நாம கற்றுக்கொண்ட கல்வி

மூற்றும் இவர்கல்விக்குமுன் எத்தன்மைத்தாகும் (மிக அற்பமாகுமெ ன்றபடி) என்று நினைத்து முன்னர்த் தாங் கற்றதே பெரிதென்றிரு ந்த எண்ணம் அழியக்கடவர். எ-று.

அதிகங் கற்றோமென்று செருக்கடையாது பின்னும் பின்னுங் கற்றல்வே ண்டுமென்பது கருத்து.

அம்மா - ஓரதிசயவிடைச்சொல். தாங்கற்றதே பெரிதென்னுங் கர்வம், கற்றதைக் கெடுத்தலன்றிப் பின்னுங் கற்கவிடாமைபற்றிக் கருத்தழிக என்றார். "செருக்குறவழியுங்கற்றகல்வி" என்பது திருவிளையாடற்புராணம். மிகவற்ப மென்பது தோன்ற வற்றே என்றார். (கச)

கல்வியுஞ்செல்வமும்.

கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படும்—இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் றாமுந்
தலைவணங்கித் தாழப் பெறின்.

(இ-ள்.) கல்வியுடைமை பொருளுடைமை என்ற இரண்டு செல்வமும் செல்வம் எனப்படும் - (ஒருவரிடத்துள்ள) கல்விப்பொருள் செல்வப்பொருளென்று சொல்லப்பட்ட இருவகைச் செல்வமுஞ் செல்வந்தானென்று நன்கு மதிக்கப்படும்—இல்லார் குறையிரந்து தம் முன்னர் நிற்பபோல் - அவ்விருவகைப்பொருளு மில்லாதவர் குறை கூறி யாசித்துத் தமக்கு முன்னே பணிந்து நிற்றல்போல—தாமும் தலைவணங்கி தாழ பெறின - தாமும் பிறர்முன்னே தலைசாய்ந்து பணிந்தொழுகப் பெறுவாராயின். எ-று.

செருக்குடையவருடைய கல்வியுஞ் செல்வமுஞ் சிறிதும் மதிக்கப்படமாட் டாவென்பது கருத்து.

உடைமை - பொருள். தாழ்ந்துநடப்போனுடைய செல்வமே தனக்குரிய நன்குமதிப்பினைத் தப்பாது பெறுமென்னுங் கருத்தினையடக்கித் தலைவணங்கித் தாழப்பெறின் செல்வமுஞ் செல்வமெனப்படுமென்றார். செல்வமென முன்னர்ப் பெறப்பட்டதாயினும் நன்குமதிக்கப்படுதலாகிய ஒருகருத்துத்தோன்றப் பின்னுங் கூறுதலால் இது விதியணி. பணிவில்லாரிடத்துள்ளதுஞ் செல்வமெனப்படினுஞ் செருக்கென்னுமழுக்கடைந்து வேறொன்றாக எண்ணப்படுமென்க. (கரு)

பெரியோர்பணிவு.

ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணி னனிதாழ்ப—தூக்கின
மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலைக்கு.

(இ-ள்.) ஆக்கம் பெரியார் - செல்வம் பெரிதுடையவர்—சிறியா ரிடைப்பட்ட மீச்செலவு காணின் நனி தாழ்ப - சிறியவரிடத்திலே தோன்றிய தலையெடுப்பினைக் காண்பாராயின் தாம் மிகவும் பணிந்

தொழுகுவர்—துலைக்கு தூக்கில் - தராசிலே தூக்கப்படுமாயின்;— மெலியது மேன்மேல் எழ செல்ல செல்ல - (அதற்குத் திருட்டாந்தம்) கனமில்லாத நொய்ய பொருள் அதிகம் உயரும்படி மேலே போக—வலிது தாழும் அன்றே - கனமுடைய வலிய பொருள் கீழே அதிகந் தாழுமல்லவா. எ-று.

பெருஞ்செல்வமுடையவர் அடங்கிநடப்பரென்பது கருத்து.

ஆக்கம் - ஆக்கிக்கொள்ளப்படுவதாகிய கல்வியும் பொருளுமெனப்பட்ட செல்வம். மீசெலவு - தமக்குரிய அளவுகடந்து சொல்லினுஞ் செயலினும் மேலேபோதல். (கசு)

### தற்புகழ்ச்சியால்வருங்கேடு.

விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யும்
நலத்தகையார் நல்வினையுந் தீதே—புலப்பகையை
வென்றனம் நல்லொழுக்கி னின்றேம் பிறவென்று
தம்பாடு தமமிற் கொளின்.

(இ-ள்.) புலப்பகையை வென்றனம் - பஞ்சப்புலன்களாகிய பகைகளையும் வென்றேம்—நல்லொழுக்கில் நின்றேம் என்று - நல்லொழுக்கத்திலும் வழுவாது நிற்கின்றோமென்று கருதி—தம் பாடு தம்மில் கொளின் - தமது பெருமையைத் தம்முள்ளத்திலே மதிப்பாராயின்—விலக்கிய ஓம்பி விதித்தனவே செயயும் - (நூல்களிலே) விலக்கப்பட்டவைகளை ஒழித்து விதிக்கப்பட்டவைகளைச் செய்கின்ற—நலத்தகையார் நல்வினையும் தீதே - நற்குணமுடையாரது புண்ணியமும பாவமாக முடியும். எ-று.

தாம், செய்தோமென்று தம்மைத் தாமே மதிப்பவருடைய புண்ணியச் செயலும் பாவச்செயலாய் முடியுமென்பது கருத்து.

தன்னுயர்ச்சிகருதலாகிய செருக்கு மனத்தினை மாசுபடுத்திப் பாவமும், பழியுங் கேடும் பயத்தலால் நல்வினையுந் தீதேயென்றார். ' தன்னை நயந்தொருவன செய்த தருமங்க ளென்னபயந்தனவோ" என்றார் பாரதவெண்பாக்காரர். பிற - அசை. (கஎ)

### தற்புகழ்ச்சியாலிகழ்ச்சியாதல்.

தன்னை வியப்பிப்பான் றற்புகழ்த றீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம
நயவாமை யன்றே நலம்.

(இ-ள்.) தன்னை வியப்பிப்பான் - (ஒருவன் பலராலும்) தன்னை நன்குமதிப்பிக்கக் கருதி—தற்புகழ்தல் நன்னீர் சொரிந்து சுடர் தீ வளர்த்தற்று - தானே தன்னைப் புகழ்ந்துகொள்ளுதல் தண்ணீரை வார்த்து விளக்கினெரியைச் சுவாலிக்கச்செய்தலையொக்கும்—வியப்

பாவது தன்னை வியவாமையன்றே - நன்குமதிப்பென்று சொல்லப் படுவது தானே தன்னைப் புகழாமையல்லவா—நலம் இன்பம் நயவா மையன்றே - நற்சுகமாவது உலகவின்பத்தினை விரும்பாமையல்லவா. எ-று.

தானே தன்னைப் புகழ்வோன் நல்லுணர்வில்லாத மூடனென்பது கருத்து.

தண்ணீரால் விளக்கவிதலன்றி இருளும் பரத்தல்போலத் தற்புகழ்ச்சியி னால் முன்னிருந்த புகழ் கெடுதலன்றி இகழ்ச்சியும் பரக்குமென்பது தோன்றத் தற்புகழ்தரீச்சுடர் நன்னீர்சொரிந்து வளர்த்தற்றால் என்றார். "தன்னுடைப் பெருமிதத்தினை வியந்தவர்தாழ்ந்து மன்னுயிர்த்தொகை நகைதர வருந்துவர் கண்டீர்" என்பது மகாபாரதம். வியப்பிப்பான் பானீற்று வினையெச்சம். (கஅ)

## புகழடையுமுபாயம்.

பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்ப தொன்றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்.

(இ-ள்.) பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் - பிறராலே நன் குமதிக்கற்பாடு பெறவிரும்புவோன்—யாண்டும் மறவாமே நோற்பது ஒன்று உண்டு - எவ்விடத்தும் மறந்துவிடாது நியமமாகப் பேணிக் கொள்ளப்படுவதொரு காரியம் உண்டு—(அதுதான் யாதெனின்) பிற ர்பிறர் சீரெல்லாம் தூற்றி - பிறராயுள்ளார் பலருடைய கீர்த்திகளை யெல்லாம் அங்கங்கே பலருமறியும்படி எடுத்துச்சொல்லி—சிறுமை புறம் காத்து - (அவர்மாட்டுள்ள) குற்றங்கள் புறத்திலே சிறிதும் பர ப்பாமற் காத்து—(பிறர்வசைபேசாமலென்றபடி) யார்யார்க்கும் தாழ் ச்சி சொலல் - எவ்வெவர்க்கும் பணிவோடு கூடிய இன்சொற்களைச் சொல்லுதலேயாம். எ-று.

பிறர்வசைகளைப் பேசாதொழித்துப் பிறர் கீர்த்திகளைமாத்திரம் எடுத்துக் கூறுவோன் நன்குமதிக்கப்படுவனென்பது கருத்து.

அடுக்குப் பன்மைப்பொருட்டு. இதனால் நன்குமதிப்புப் பெறுதற்கேற்ற உபாயங் கூறப்பட்டது. (கக)

## கல்விவழிநில்லார்வார்த்தை.

கற்றுப் பிறர்க்குரைத்துத் தாநில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை—சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல்.

(இ-ள்.) கற்று பிறர்க்கு உரைத்து - நூல்களைக் கற்றுணர்ந்து (அவற்றுள்ள) நன்னெறிகளைப் பிறருக்குப் போதித்தும்—தாம் நில்லார் வாய்ப்படூஉம் வெற்றுரைக்கு ஓர் வலியுடைமை உண்டு - தாம் அந்

நெறிக்கண்ணே நில்லாதவருடைய வாயின்கட் டோன்றும் பயனில் மொழிக்கும் ஒரு வலியுடைமை உண்டு—(அதுதான் யாதெனின்) சொற்ற நீர் நில்லாதது என் என்று - எமக்கெல்லாம் நன்னெறிகளை எடுத்துரைத்த நீவிர் நன்னெறிக்கண்ணே அமைந்து நில்லாத காரணம் யாதென்று— நாண் உறைப்ப நேர்ந்து ஒருவன் சொல்லாமே - நாணம் அதிகரிக்கும்படி எதிர்நின்று ஒருவன் சொல்லாதபடி—சூழ்ந்து சொலல் - நன்காலோசித்து உபாயமாகச் சொல்லுதலேயாம். எ-று.

கற்றுணர்ந்தோர் அக்கல்விக்குத் தக நன்னெறிக்கணில்லாது தாம் பிறர்க்கு நன்னெறிகளைப் போதித்தல் இழிவென்பது கருத்து.

ஆரவாரமாத்திரைக்கேயன்றிக் கல்வியின் பயனாகிய நன்னெறிக்குக் காரணமாகாமையின் வெற்றுரையென்றார். உணர்ந்தோர்வலியுடைமை என்பது புகழ்வதுபோலப் பழித்தல். "ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப் பேதையிற் பேதையாரில்" என்பது வள்ளுவர். (௨௦)

ஞானநூல்களைவிற்பவர்.

பிறர்க்குப் பயன்படத் தாங்கற்று விற்பார்
தமக்குப் பயன்வே றுடையார்—திறப்படூஉந்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை வேலை கொளல்.

(இ-ள்.) பயன்பட தாம் கற்ற பிறர்க்கு விற்பார் - தமக்கு முத்தியின்பமாகிய பயனுண்டாகுமவண்ணம் தாமமாலே கற்றுக்கொள்ளப்பட்ட ஞானநூல்களைத் திரவியங்கருதிப் பிறருக்குச் சொல்பவர்— தமக்கு வேறு பயன் உடையார் - தமமுடைய கருத்திற்கு மாறாயுள்ள வேறொரு பயனையுடையவராவர்—(அதுதான் யாதெனின்) திறப்படூஉம் தீவினை அஞ்சா விறல் கொண்டு - பலவகைப்பட்ட பாவங்களுக்குமஞ்சாத வீரங்கொண்டு—தென்புலத்தார் கோவினை வேலை கொளல் - தென்புலத்துள்ளார் தலைவனாகிய இயமனைத் தமக்கு வேலை செய்பவனாக ஆக்கிக்கொள்ளுதலேயாம். எ-று.

ஞானநூல்களைத் திரவியநிமித்தம் பிறர்க்குச் சொல்பவர் நரகவேதனைபெறுவரென்பது கருத்து.

திரவியநிமித்தம் ஞானநூல்களைக் கொடுத்தலாகாதென்பதனை "ஆணவமாயைகாமியமுயிர்களமலனுமநாதிமெய்ப்பொருளே - மாணவகாவிப்பொருள்களையிவற்றையயக்குறும்வாக்கியந்தம்மைப்-பேணுறுபருவமடுத்தவர்க்கல்லாற் பெறும்பயன்புகழ்முதலொன்று - காணியகொடுப்போரவரொடுநரகங் காணியாக்கைக் கொள்வர்விரைந்தே" என்னுந் தணிகைப்புராணத்தாலறிக. தென்புலத்தார் - தென்றிசைக்கணுள்ள பிதிரர். இயமனை வேலைகொளலாவது தம்மாற் செய்யப்பட்ட பாவங் காரணமாகத் தென்புலமழைத்தல், பாவங்களையாராய்தல், விசாரணைசெய்தல், பலவிதநரகில்விட்டுப் பலவிததண்டனைசெய்தல் முதலிய அத்துணைவேலைகளையெல்லாம் அவனைக்கொண்டு தமக்குச் செய்வித்தல். (௨௧

### கல்லாதவர்வார்த்தை.

கற்பன வூழற்றார் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றூத்தை வாயங்காத்தல்—மற்றுத்தம்
வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல்.

(இ-ள்.) கற்பன ஊழ் அற்றார் - நூல்களைக் கற்றுணர்தற்குக் காரணமான நல்விதியில்லாதவர்—கல்வி கழகத்து ஒற்கமின்று ஊத்தைவாய் அங்காத்தல் - கற்றோர்சவையிலே அடக்கமின்றித் தம்முடைய அசுத்தமாகிய வாயைத்திறத்தல்—மா பறவை புல்லுரு அஞ்சுவ போல் - மிருகங்களும் பறவைகளும் புல்லுருவத்தைக் கண்டு பயப்படுதல் போல—தம் வல்லுரு அஞ்சன்மின் என்ப - தம்முடைய வலிய வடிவத்தைக் கண்டு நீவிர் அஞ்சவேண்டாம் என்று சொல்லுதலேயாம். எ-று.

கல்வியறிவில்லாதவர் கற்றோர் சபையிலே யாதுஞ் சொல்லாது மௌனமாயிருத்தல் நன்றென்பது கருத்து.

அருவெருக்குஞ் சொற்கள் தோன்றுதற்கு இடமாதல்பற்றி ஊத்தைவாயென்றார். புல்லுருவாவது தானியங்களைச் சிதையாமல் மிருகங்களும் பறவைகளும் பார்த்துப் பயந்தோடும்படி புல்லாற் செய்து வைக்கப்படும் பாவை. மூடர் சபையிற் பேசுதலில் வேறொன்று குறித்தேற்றப்படுதலால் இது தற்குறிப்பேற்றவணி. (உஉ)

### கல்விபெறுதற்குரியவர்.

போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கொ ணகையினார் வாய்ச்சேரா—தாக்கணங்கும்
ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கொளப்படுவ தில்.

(இ-ள்.) போக்கு அறு கல்வி - குற்றம் நீங்கப்பெற்ற கல்வியும்—புலமிக்கார்பால் அன்றி மீக்கொணகையினார்வாய் சேரா - நுண்ணறிவுடையாரிடத்தன்றி மேலாகக் கொள்ளப்படும் பிரபுக்களிடத்திற் சேரமாட்டா—(அதற்குத் திருட்டாந்தம) தாககணங்கும் ஆண அவாம் பெண்மையுடைத்து எனினும் - அழகிற்சிறந்த இலக்குமிதானும் ஆணாய்ப்பிறத்தலை விரும்புதற்குக் காரணமான பெண்டன்மையுடையதாயினும்—பெண் நலம பேடு கொளப்படுவது இல் - ஒருபெண்ணால் அநுபவிக்கப்படுமின்பம் ஒருபேட்டினால் அநுபவிக்கப்படுதலில்லை. எ-று.

கல்விப் பொருள் நுண்ணறிவுடையாராலன்றிப் பிரபுக்களாற் பெறற்பாலதன்றென்பது கருத்து.

நகையினார் - பிரபுக்கள். நகை - ஒளி. ஒளியாவது தாமுளராயகாலத்து அதிகாரம், செல்வம், நன்குமதிப்பு முதலியவைகளாலே மேற்பட்டு விளங்குதலுடைமை. குமரியைக் குமரிகூடி இன்பம்பெறுதல் கூடாமையின் இலக்குமி

யுந் தான் ஆடவனாகப் பிறந்து கூடி இன்பம்பெற விரும்பும் அத்துணைச்சிறப்புடையதெனபது புலப்படத் தாக்கணங்கும் ஆணவாம் பெண்மை என்றார். பெண்மை - பெண்ணுக்குரிய அழகுடைமை. பேடு - ஆண்டன்மை நீங்கிப் பெண்டனமை சார்ந்திருப்பது; அலியன்று. அலி - பெண்டன்மை நீங்கி ஆண்டன்மை சார்ந்திருப்பது. பேடும் வேறே அலியும் வேறே என்பதைப் "பெண்ணேனோ வலிதானோ பேடோ வென வுரைப்பார்" என்னுங் கந்தபுராணச் செய்யுளாலுமுணர்க. (உ௩)

## அறிவிலார்க்குரைப்பவர்.

கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறாஉங்
குற்றந் தமதே பிறிதன்று—முற்றுணர்ந்துந்
தாமவர் தன்மை யுணராதார் தமமுணரா
ஏதிலரை நோவ தெவன்.

(இ-ள்.) கற்றன கல்லார் செவிமாட்டி - (ஒருவர்) தம்மாலே வருந்திக் கற்றுணரப்பட்ட நூற்பொருள்களை மூடர் காதுகளிலே புகும்படி எடுத்துச்சொல்லி—கை உறாஉம் குற்றம தமதே பிறிதன்று - சிறுமையடைதற்குக் காரணமான குற்றம அறிவின்மையுடைய தம்மாலே வந்ததன்றிப் பிறரொருவராலே வந்ததன்று—தாம் முற்று உணர்ந்தும் அவர் தன்மை உணராதார் - தாம் பல நூன்முடிபுகளை அறிந்திருந்தும் அந்த மூடருடைய சுபாவத்தை அறியாராயிருத்தலைக் கருதி வருந்தாது—தம் உணரா ஏதிலரை நோவது எவன் - கல்வியைப் போதிக்குந் தம்மை மதியாத பிறர் செயலைக் கருதி வருந்துவது யாது கருதி. எ-று.

தாம் வருந்திக் கற்ற நூற்பொருளை யாதும் உணர்வில்லாத மூடருக்குச் சொல்பவர் அவரினும் பெருமூடரென்பதுகருதது. கந்தபுராணகாரரும "யாதொர்புந்தியை - அறிவிலார்க்குரைப்பவ ரவரிற்பேதையோர" என்றார். வடநூலாருள்ளே வரருசி என்பவரும் நீதிரத்நம் என்னும் நூலிலே "பிரமாவே! நூற்றுக்கணக்கான வேறு துக்கங்களைத தரினுந் தருக; மூடர்க்குபதேசித்தலைமாத்திரம் என்தலையிலே எழுதாதே! எழுதாதே!" என்று வேண்டினார். செல்லத்தக்க நல்வழியிலே விடாமைபற்றி மாட்டி என்றார். நூன்முடிபுகளாவன. "புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க - நல்லவை யணன்குசெலச் சொல்லுவார்" என வள்ளுவரினும், "வெள்ளைக்கோட்டியும் விரகினிலொழிமின்" எனச் சிலப்பதிகாரத்தினும் வருவன போல்வன. (உ௪)

## கற்றாரைக்காவலர்மதித்தல்.

வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்
காத்தது கொண்டாங் குவப்பெய்தார்—மாத்தகைய
அந்தப்புரத்தது பூஞை புறங்கடைய
கந்துகொல் பூட்கைக் களிறு.

(இ-ள்.) மிகல் மக்கள் வேத்தவை காவார் - உயர்ந்தோர் அரசசவையை எதிர்நோக்கிக் காத்துநிற்கமாட்டார்—(ஆயினும் அரசராலே

அழைத்துபசரிக்கப்பட்டு மகிழ்வடைவர்) வேறு சிலர் அது காத்துக் கொண்டு ஆங்கு உவப்பெய்தார - அவரலலராய சிறியோர் சிலர் அரசசவையைப் பொருட்படுத்தி இடைவிடாது காத்து நின்றும் அவ் வரசரால் மதிக்கப்பெற்று மகிழ்வடையமாட்டார்—(அதற்குத் திருட்டாந்தம்) பூஞை மா தகைய அந்தப்புரத்தது - பூனையானது பெருஞ் சிறப்புடைய அந்தப்புரத்தையே இடைவிடாது காத்துநிற்குமியல் புடையது—(ஆயினும் உணவு முதலியவைகளாலே உபசரிக்கப்பட்டு மகிழ்வடையமாட்டாது) கந்து கொல் பூட்கை களிறு புறங்கடைய - தூணை யுமழிக்கும் வலியுடைய யானையோ கடைவாயிலிலே நிற்குமியல்புடையது— (ஆயினும உணவு முதலியவைகளினாலே உபசரிக்கப் பட்டு மகிழ்வடையும்.) எ-று.

உயர்ந்தோர தம்மைப் பராமுகஞ்செய்வாராயினும் அரசர் அவரை வருந்தியழைத்து நன்குமதிப்பரெனபது கருதது.

"பல்லோருள்ளுமூத்தோன் வருகவென்னாதவருள் அறிவுடையோனாற அரசுஞ்செல்லும்" என்பது புறநானூறு. அந்தப்புரம்-அரசன்றேவியிருக்குமிடம்.()

---

அரசன்.

குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதலவர்க்குத் தந்தையுந் தாயும—அறவோர்க்
கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வம
இலைமுகப் பைம்பூ ணிறை.

(இ-ள்.) குலமட்கு கொழுநனே தெய்வம் - குலத்திற்பிறந்த மகளுக்கு நாயகனே தெய்வமாகும்—மன்ற புதல்வர்க்கு தந்தையுந் தாயும தெய்வம் - புத்திரர்களுக்குப் பிதாவும மாதாவுமே தெயவமாகும்—அறவோர்க்கு அடிகளே தெய்வம் - பிரமசரியவறத்தினருக்குக் குருவே தெய்வமாகும்—அனைவோர்க்கும் இலை முகம பை பூண் இறை தெய்வம் - எல்லாருக்கும் இலைத்தொழிலமைந்த முகமுடைய பசிய ஆபரணத்தையணிநத அரசனே தெய்வமாகும். எ-று.

யாவரும் அரசனைத் தெய்வம்போல மதித்து நடத்தல்வேண்டு மென்பது கருத்து.

அறவோரென்றது பிரமசரியவறத்தோரை. அவரே குருவின்வழி நிற்பவர். மகாபாரதத்திலே சாந்திபருவத்திலே "விரவு தேசிகன் வழிப்படல் வியன் மறை யுணர்தல் - பரவு நற்றவ மிரந்துணல் பகர்தன்முன் னெறியே" எனப் பிரமசரிய விலக்கணங் கூறப்பட்டது. வலியாரால் எளியார் கேடடையாது காத்தல் பற்றி அரசனை அனைவோர்க்குந் தெய்வமென்றார். "அரசனே யுலகினுக்குயி ராசனே தரும - மரசனே பெருங்கடவுளு மவனிலையென்னில்-விரைசெய்மாலை யாய் மின்னனார் கற்பு மெய்ப் பொருளு - முறைசெய் முன்னரிற் றீர்தரு மென்கொலோ வுளவாம்" என்பது மகாபாரதம். குலத்திற்குரிமைபற்றிக் கற்புடையாள் குலமகளெனப்பட்டாள். உசு)

குடியோம்பல்.

கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே யாயினுந்—தண்ணளியான்
மன்பதை யோம்பாதாற் கென்னும் வயப்படைமற்
றென்பயக்கு மாணல் லவர்க்கு.

(இ-ள்.) கண்ணில் சொலி - செயற்பாலனவற்றைக் கட்குறிப்பினாலே அறிவித்து—செவியின் நோக்கும் இறைமாட்சி - அறியற்பாலனவற்றைச் செவிவாயிலாகக் கேட்டுணரும் அரசியன்மாட்சி—புண்ணியத்தின் பாலதே ஆயினும் - முன்னர்ச்செய்த நல்வினைப்பகுதியால் அமைந்ததேயாயினும்—தண் அளியான் மன்பதை ஓம்பாதாற்கு என்னும் - தண்ணிய அருளோடும் மக்கட்பரப்பினைப் பாதுகாப்புச் செய்யாதவனுக்கு அம்மாட்சி என்னபயனைக் கொடுக்கும்—(அதற்குத் திருட்டாந்தம்) வயப்படை ஆணல்லவர்க்கு என் பயக்கும் - தறுகண்மையையுடைய ஆயுதங்கள் ஆண்டன்மையில்லாத பேடியர்களுக்கு யாது பயனைக் கொடுக்கும். எ-று. ௩௪

குடிகளை அருளோடும் பாதுகாப்புச் செய்யாத அரசனுடைய அரசியன்மாட்சி சிறிதும் பயன்படாதென்பது கருத்து.

இரகசியங்கள் பிறராலறியப்படிற் பங்கமுறுமென்பதுபற்றிக் கண்ணிற்சொலி என்றும், இருந்தவிடத்திலிருந்து காரியங்களைக் கேட்டு அறிதல்பற்றிச் செவியினோக்கும் என்றுங்கூறினர். தண்ணளியான் மன்பதையோம்புதலாவது இன்சொற்கூறித் தளர்ந்தவழி வேண்டுவன கொடுத்துத் தன்னாலும், தன்பரிவாரத்தாலும், பகைவர், துட்டர் முதலியோராலும், கொடிய விலங்குகளாலும் பிறவற்றாலும் குடிகள் வருந்தாவண்ணம் பாதுகாத்தல். பேடியர்கைப்படை யாதும் பயன்படாமைபற்றி என்பயக்கும் என்றார். "பகையகத்துப் பேடிகையொள்வாள்" என்பது வள்ளுவர். (உஎ)

வரிவாங்குதல்.

குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்று
மடிகொன்று பால்கொளலு மாண்பே—குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோற்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.

(இ-ள்.) குடி கொன்று - (தண்ணளியோடும் ஓம்பாது) குடிகளை வருத்தி—இறை கொள்ளும் கோமகற்கு - வரிப்பொருளை வாங்கும் அரசனுக்கு—கற்று மடி கொன்று பால்கொளலும் மாண்பே - (உண்டி முதலியவற்றாற் பேணிக்கொள்ளாது) கறவைப்பசுவின் மடியை நோவுற வருத்திப் பால்கறத்தலும் நற்செயல்போலக் காணப்படும்—குடியோம்பி கொள்ளுமா கொள்வோற்கு - குடிகளைத் தண்ணளியோடும் பாதுகாத்து வரிகளை வாங்கவேண்டும் முறையாக வாங்கும் அரசனுக்கு—மாநிதியம் வெள்ளத்தின் மேலும் பல காண்டுமே - பெரியசெல்வம் வெள்ளமென்னுந் தொகையின்மேலும் பலவாக வளர்ந்து பெருகுதலைக் கண்டோமே. எ-று.

குடிகளைத் தழுவியோம்பாது வரிப்பொருளை நெருக்கிவாங்கும் அரசனுக்கு வரிப்பொருளும் வந்து கைகூடாதென்பது கருத்து.

வருத்தி வாங்குதலாவது ஆறிலொன்றுக்கதிகமாக வாங்குதலும் வாங்கவேண்டியவைகளை நெருக்கி வாங்குதலும் பிறவுமாம். குடிகள் தளர்ந்துழி ஆறிலொன்றுதானுமாகாதென்பது சிலநூற்றுணிபு. "குடிதளர் வுற்றகாலைக் கொள்பொருளாறிலொன்றும விடுவது செய்து" என்பது விநாயகபுராணம். கொள்ளுமாறு கொள்ளலாவது இரத்தத்தினை அட்டையும், பாலினைக் கன்றும், தேனினை வண்டும் கவர்தல்போல வரிப்பொருள்களைச் சிறிது சிறிதாக வாங்கவேண்டுமெனமானவதருமசாத்திரங் கூறியவாறே குடிகளிடரடையாமல் அருளோடுமன்போடுங் கவர்தல். "அடிநிழலாரை வருத்தாது கொண்டாரும் போலாது கோடல்" என்பது பழமொழி. "குடிகளையோம்பாது வரிவாங்குவோன நரகமடைவனென்பது" பிரமாண்டபுராணம். (உஅ)

## கொடுங்கோன்மை.

இன்று கொளற்பால நாளைக் கொளப்பொறான்
நின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவன்
ஆவன கூறி னெயிறலைப்பா னாறலைக்கும்
வேடலன வேந்து மலன்.

(இ-ள்.) இன்று கொளற்பால நாளை கொள பொறான் - இன்றைக்கே பெற்றுக்கொள்ளற்பாலனவாகிய வரிப்பொருளைக் குடிகளின்றைக்குத் தரவியலாதென்புழி அதனை நாளைக்குப் பெறலாமென்று பொறுத்திருக்கமாட்டான்—நின்று குறையிரப்ப நேர்படான் - முன்னிலையிலே நின்று தங்குறைகளைச் சொல்லி யாசித்தும வேண்டுவன பெறுதற்குக் காட்சிக்கெளியனாய் அத்தாணியிலே வந்திருக்கமாட்டான்—சென்று ஒருவன் ஆவன கூறின் எயிறலைப்பான் - ஒருவன் போய்த் தனக்குவேண்டியவைகளைச் சொல்லின் அன்போடு கேளாது பற்கடித்துறுக்குவான்—(இவ்வியல்புடையவன்) ஆறலைக்கும் வேடலன் - வழிச்செல்வோர் பொருளைப் பறிக்கும வேடனேயெனிலவனுமல்லன்—வேந்தும் அலன் - அரசனுமல்லன். எ-று.

குடிகளுடைய தளர்வுகண்டிரங்காதவனும் குறைமுறைகளைக் கேளாதவனுமாகிய அரசன் வழியினின்று பொருள்பறிக்கும் மறவனினுங் கொடியனென்பது கருத்து.

சாதிதருமமாகிய வழிப்பறித்தலையும் வாய்ப்புழி ஒருகால் நேர்நின்று செய்யும் வேடனினும் அரசவேடத்துள்ளே மறைந்து நின்று பலமுறை தன்கீழ் வாழுங் குடிகளை வருத்திப் பறிக்கும் இவன் கொடியனாதல்பற்றி வேடலன் என்றும், காட்சிக்கெளியனாதன் முதலியவின்மைபற்றி வேந்துமலன் என்றுங் கூறினார். (உகூ)

## அரசபோகமயக்கம்.

முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப வுடுத்துண்ப வுண்ணா—இடித்திடித்துக்
கட்டுரை கூறிற் செவிக்கொள்ளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம.

(இ-ள்.) முடிப்ப முடித்து - முடிக்கப்படுவனவற்றை முடித்து—பின் பூசுவ பூசி - அதன்பின்னர்ப் பூசப்படுவனவற்றைப் பூசி—உடுப்ப உடுத்து - உடுக்கப்படுவனவற்றை உடுத்து—உண்ப உண்டு - உண்ணப்படுவனவற்றையுண்டும்—இடித்து இடித்து கட்டுரை கூறில் - நெருக்கிநெருக்கி உறுதிவார்த்தைகளைச் சொல்லில்—செவிக்கொள்ளா கண்விழியா - அவைகளைச் செவிகொடுத்துக் கேட்டுணராது. முன்னிற்பவரைக் கண்விழித்துப் பாராது—(இவ்வியல்புடையது யாதெனின்) நெட்டுயிர்ப்போடு உற்ற பிணம் - நெடுமூச்சோடு பொருந்திய பிணமேயாம். எ-று.

அரசர்க்குரிய வேஷங்களைத் தரித்தவனாயினும் அமைச்சர்சொற் கேளாதவனுங் குடிகண்மேலே அருளில்லாதவனும் பிணத்தோடொப்பனென்பது கருத்து.

முடிப்பன - முடியிலணியப்படுவன. பெருஞ்செல்வம், பெருந்தலைமை, பெருங்காமம் முதலியவைகளிலே பெரிதும் மயங்கிச் செய்வனவுந் தவிர்வனவு மறியாமைபற்றிப் பிணமென்றார். "அரிசனம் பூசிமாலை யணிந்து பொன்னுடைசாத்திப், பரிசனமுன்புசெல்லப் பாரகர்பரிக்கக் கொட்ட, வரிசின்ன மூதத் தொங்கல் வந்திடவுணர்வுமாண்டு, பெரியவர் பேச்சு மின்றிக் கிடத்தலாற் பிணத்தையொப்பர்" என்பதுசித்தியார். பிணமென்றது அறிவில்லாத அரசனை என்பது ஒட்டணிவகையாற் பெறப்படும். (௩0)

அரசநீதி.

ஒற்றிற் றெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றோ டுணையாத் தெரிதந்துங்—குற்றம்
அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று.

(இ-ள்.) ஒற்றின் தெரியா - வேய்வுகாரன் வழியாக நிச்சயித்தறியப்படாத காரியங்களைச்—சிறைப்புறத்து ஓர்தும் என பொன் தோள் துணையா தெரிதந்தும் - ஒதுக்கிடத்திலே சென்று நின்று நாமேயறியக்கடவேமென்று கருதி அழகிய புயங்களே துணையாகச்சென்று ஆராய்ந்தறிந்தும்—குற்றம் அறிவு அரிதென்று அஞ்சுவதே செங்கோன்மை - ஒருவர்மாட்டுள்ள குற்றங்களைத் துணிவுபெற அறிந்துகொள்வது கூடாதென்று தண்டஞ்செய்தற்குப் பயப்படுவதே அரசநீதியாகும்—சென்று முறையிடினும் கேளாமை அன்று - ஒருவன்போய்த் தன்பாலடைந்த இடரை அறிவித்தும் அதனைக் கேட்டறிந்து நீக்காமையரசநீதியன்று. எ-று.

அரசன் தான் நேரே சென்றறிந்த காரியத்தினுந் துணிவுபெறாது அதனைப் பின்னுமாராயவேண்டுமென்பது கருத்து.

அரசன் தானே விசாரணைசெய்தறிவதே நீதியாகப் பிறர் அறிவித்தழியுங் கேட்டறிந்து செயற்பாலன செய்யாமை பெரிதும் அநீதியே என்பதுதோன்ற முறையிடினும் என்றார். (௩௧)

## அரசனுக்குப்பேரறிவு.

ஏதிலார் யாதும் புகல விறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு—நேர்நின்று
காக்கை வெளிதென்பா ரென்சொல்லார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு.

(இ-ள்.) ஏதிலார் யாதும் புகல - பக்கத்துள்ளோர் யாதெனினுஞ் சொல்லக்கடவர்—இறைமகன் கோது ஒரீஇ கொள்கை முதுக்குறைவு - அதனைக்கேட்டு விசாரணை செய்பவனாகிய அரசன் குற்றமுள்ளவைகளை நீக்கிக் குணமுள்ளவைகளைக் கைக்கொண்டு தீர்ப்புச் செய்தல் அவனுக்குப் பேரறிவாலாய செயலாகும்—நேர் நின்று காக்கை வெளிதென்பார் என்சொல்லார் - எதிரேநின்று கருநிறமுடைய காகத்தினை வெண்ணிறமுடையதென்று சொல்லுவோர் எந்தப்பொய்யைத்தான் சொல்லமாட்டார்கள்?—தாய்க் கொலை சால்புடைத்தென்பாரும் உண்டு - தாயைக் கொல்லுதலாகிய கொடும்பாவத்தினைத்தானும் குணமுள்ள நற்செயலென்று நியாயங்காட்டிச் சாதிப்பவர்களும் உலகத்திலே இருக்கின்றனர். எ-று.

*பிறர் சொல்வனவெல்லாங் கேட்டுப் பொய் மெய்களைப் பொருந்துமாற்றானும் பிறவாற்றானும் உள்ளவாறுணர்ந்து மெய்யாயுள்ளவைகளைக் கொள்ளுவது அரசனுக்குப பேரறிவாகும் என்பது கருத்து.*

*பொய்யாவது மெய்யாவது போலி நியாயமாவது சொல்லினுமென்பது தோன்ற யாதும புகல என்றார். புகல என்பது அகரவீற்று வியங்கோண்முற்று. உலகத்தார் தங்கள்தங்கள் கருமத்துக் கிசையக் கூறுவதைப் பகுத்தறியு மறிவில்லாதவன் அரசனெனப்படான். மகாபாரதத்திலே சாந்திபருவத்திலே "எவவுரையெவர் சொற்றாலுந் தன்னறிவேற நோக்கி - யவவுரை யுண்மையன்மை யறிபவரறிவு ளோராம் - கைவருமுலகிற்றத்தங் கருமத்துக்கேற்பச் சொல்வர் - அவவகையுணரக் காதையறைகுவன் கேட்டிமன்னே" என நீதிவிசாரணை கூறப்பட்டது.*

*அக்கதையாவது: விதிசையென்னும் நகரிலே ஒருவனிறந்துவிடப் பலருங் கூடி அபரக்கிரியை செய்யும்படி அப்பிணத்தைச் சுடுகாட்டுக்குக் கொண்டு வந்தார்கள். அங்கே பசியோடுவந்த ஒரு கழுகு அப்பிணத்தை உண்ணக்கருதி, "நீங்கள், கொடிய பிசாசுகளுலாவும இக்காட்டிலே இம்மாலைக்காலத்திலே நின்றகப்படாமல் ஓடுங்கள்" என்றது. அவர்களுமோடினார்கள். அதனை நரியொன்று தானுண்ணக் கருதி, "சிறிதுநேரம் நின்றுபாருங்கள் அவ்வுயிர் மீண்டுவரும்" என்றது. அதனை நம்பி அவாகள் திரும்பி வருதலைக் கழுகு கண்டு "ஆயிரத்து முந்நூறு வருடம் வரையில் யானறிவேன். இறந்தவர் பிழையார்" என்றது. அவர்கள் பின்னும் நம்பிப் போயினர். அதனை நரிகண்டு இறந்து பிழைத்தவர் சிலரைச் சொல்லித் தடுத்தது. என்பதேயாம்.* (கஉ)

## அறிவில்லாவரசர்.

கண்கூடாப் பட்டது கேட்டெனினுங் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகும்—மண்டெரி

தான்வாய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
பேரா பெருமூச் செறிந்து.

(இ-ள்.) கேடு கண்கூடு ஆ பட்டது எனினும் - நமக்குக்கேடுதி
யை விளைப்பது தமது கண்ணுக்கெதிரே வந்ததாயினும்—உணர்ச்சி
கீழ்மக்கட்கு உண்டோ இல்லாகும் - அதனை நீங்குதற்கேற்ற நல்லு
ணர்வு மூடரிடத்திலுண்டோ இல்லையேயாம்—(அதற்குத் திருட்டாந்
தம்) மண்டு எரிதான் வாய் மடுப்பினும் - நெருங்கிய அக்கினியானது
தன் வாய்க்குள்ளாகக் கொண்டாலும்—மாசுணம் பேரா பெருமூச்
செறிந்து கண்டுயில்வ - பெரும்பாம்புகள் அசைவின்றிப் பெருமூச்சும்
விட்டு நித்திரையாய்க் கிடக்கும். எ-று.

மூடர்களுக்கு எதிரேவருந் தீங்குதானும் புலப்படாதென்பது கருத்து.

கண்கூடு - பிரத்தியக்ஷம். மடுத்தல் - இடைப்படுத்தல். வரக்கடவதாகிய
தீங்கினை முன்னரறிந்து காத்தலே அறிவுடையார் செயலாக வந்தும் உணராமை
பற்றி எனினுமென்றார். (௩௩)

## அரசர்க்குக்கேடுபயப்பன.

நட்புப் பிரித்தல் பகைநட்ட லொற்றிகழ்தல
பக்கத்தார் யாரையு மையுறுதல்—தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி.

(இ-ள்) நட்பு பிரித்தல் - நண்பனைப் பகைவனுக்கிக்கொள்ளுதல்
—பகை நட்டல் - பகைவனை நண்பனுக்கிக்கொள்ளுதல்—ஒற்று இக
ழ்தல் - ஒற்றனுயுள்ளோனைப் பராமுகஞ்செய்து நீக்குதல்—பக்கத்
தார் யாரையும் ஐயுறுதல் - அமைச்சர்களெல்லார்கண்ணும் ஐயங்
கொள்ளுதல்—தக்கார் நெடுமொழி கோறல் - பெரியோர்கூறும் உறு
திமொழிகளை அழித்தல்—பிறிது குணமாதல் - அந்நியகுணங்களை
யடைதல—(எனச் சொல்லப்பட்ட இவைகள்) கெடுவது காட்டும்
குறி - தான் கேடடைதலை முன்னரறிவிக்குங் குறியாகும். எ-று.

நட்பப்பிரித்தன் முதலாக இங்கே சொல்லப்பட்ட ஆறும் அரசனுக்குக்
கேடுவிளைக்குமென்பது கருத்து.

ஒற்றிகழ்தலாவது ஒற்றுயுள்ளார்க்குவேண்டுஞ் சிறப்புச்செய்யாதுவிடுதல்.
பகைவர்முதலியோரிடத்து நிகழ்வன அறிதலிலே கண்போன்றிருத்தலின் இக
ழ்தலாகாதென்க. எப்போதுஞ் சமீபத்திருத்தல்பற்றி மந்திரிகள் பக்கத்தாரென
ப்பட்டார். அமாத்தியர் என்பதும் அப்பொருட்டு. தக்காரென்றது அமைச்சர்
புரோகிதர் முதலியோரை. அந்நியகுணங்களாவன வேட்டைவிருப்பு, சூதாடல்
விருப்பு, கூத்துவிருப்பு முதலியனவும், துரோகம், பொறாமை, நிந்தை முதலி
யனவுமாம். (௩௪)

## பெரியோரைப்பிழைத்தல்.

பணியப் படுவோர் புறங்கடைய ராகத்
தணிவில் களிப்பினுற் றாழ்வார்க்—கணிய

இளையாண் முயக்கெனினுஞ் சேய்த்தன்றே மூத்தாள்
புணர்முலைப் போகங் கொளல்.

(இ-ள்.) பணிய படுவோர் புறங்கடையர் ஆக - தம்மாலே வணங்கப்படத்தக்கோராகிய பெரியோர் தம்மைக் காண்பது கருதி வந்து தமது தலைவாயிலின்கண்ணே இருப்பவராக—தணிவில களிப்பினால் தாழ்வார்க்கு - இருக்கைவிட்டெழுந்து சென்றவரை உபசரியாமல் அமைவற்ற களிப்பினாலே தாமசஞ்செய்வோர்க்கு—அணியது இளையாள் முயக்கு எனினும் - அணுகியிருப்பது இலக்குமியினுடைய சேர்க்கையாயினும்—மூத்தாள் போகங்கொளல் சேய்த்து அன்று - மூதேவியினுடைய போகத்தை அனுபவித்தல் தூரத்ததன்று. எ-று.

தம்பாடம்வந்த பெரியோர்களை விரைந்தெதிர்கொண் டுபசரியாதவர் தமது செல்வங்களெல்லாம் விரைந்துகெடப் பெறுவர் என்பது கருத்து.

புணர்முலை நெருங்கியஸ்தனம். களிப்பாவது அதிகாரம் குலம் செல்வமுதலியவற்றால் யாவரினுந் தம்மை மிக்கோரெனக் கருதும் மயக்கம். (௩௫)

சான்றாண்மை.

கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
சலியாத கற்ப தரு.

(இ-ள்.) கண் நோக்கு அரும்பா - விரும்பிப் பார்க்குங் கட்பார்வையே அரும்பாக—நகை முகமே நாள் மலரா - மலர்ந்த முகமே புதிய பூவாக—இன்மொழியின் வாய்மை தீங்காயா - இனிய சொல்லொடு கூடிய உண்மையே சுவையுடைய காயாக—வண்மை பலமா - கொடையே பழமாக—நலம கனிந்த பண்புடையார் அன்றே - நன்மை கனிந்த பண்புடையாரன்றோ—சலியாத கற்பதரு - அசைவில்லாத கற்பகவிருக்ஷமாம். எ-று.

விரும்பிப்பார்த்தல் முகமலர்ச்சிமுதலிய குணங்களையுடைய அரசன் கற்பக தருப்போலப் பயன்படுவனென்பது கருத்து. (௩௬)

அரசவிகை.

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பிற்
றூங்குங் களிறோ துயருறா—ஆங்கதுகொண்
டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று.

(இ-ள்.) வாங்கும் கவளத்து ஒருசிறிது - தான் வாங்கியுட்கொள்ளுகின்ற கவளத்தினின்றும் ஓரற்பபாகம்—வாய் தப்பில் தூங்குங் களிறோ துயருறா - வாயினின்றுந் தவறிக் கீழே விழுமாயின் தூங்குமியல்புடைய யானைகளோ அதனாலே துன்பமடையா—இங்கு ஊரும

எறும்பு ஒருகோடி ஆங்கு அதுகொண்டு - இவ்வுலகத்திலே ஊருகின்ற எறும்புகளுள்ளே எத்தனையோ பல அங்கே விழுந்த அப்பாகத்தினை எடுத்துக்கொண்டுபோய்—ஆருயிரோடு அயின்று உய்யும் - நிறைந்த சுற்றத்தோடு கூடியுண்டு சீவிக்கும். எ-று.

பெருஞ் செல்வமுடையவர் அதனில் ஓரற்பபாகத்தைத் தானமாக விடுவாராயின்; அதனால் எத்தனையோ சீவராசிகள் சீவிக்கும் என்னுங் கருத்து யானைவாயினின்றுந் தவறிய அற்பவுணவினால் ஒருகோடி எறும்புகள் சீவிக்குமென்பதனால் ஒட்டணியாகக் கூறப்பட்டது.

களம் - ஒருமுறை வாய்க்கொள்ளும் உணவினளவு. பெருஞ் செல்வமுடையார்க்கு ஓரற்பத்தொகையைத் தருமவழியிலே விடுதல் ஒணறிழந்தது போலாகித் துன்பங்கொடாதென்பது தாங்குங் களிற்று துயருறு எனபதனாற் பெறப்படும். (கஎ)

## கண்ணோட்டம்.

மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை
ஈகையி னேக்கழுத்த மிக்குடைய—மாகொல்
பகைமுகத்த வொள்வேலான் பார்வையிற் நீட்டும்
நகைமுகத்த நன்கு மதிப்பு.

(இ-ள்.) மா கொல் பகை முகத்த ஒள் வேலான் - யானையைக் கொல்லுஞ் சிங்கத்தின் தன்மையைத் தனனிடமுடைய ஒளிபொருந்திய படையையுடைய அரசன்—நகை முகத்த பார்வையில நீட்டும நன்குமதிப்பு - மகிழச்சி நகையோடுகூடிய முகத்தனுள்ள இனிய நோக்கினலே பதியச்செய்யும் நன்குமதிப்பு—மாகம சிறுக நிதிக்குவை குவித்து - ஆகாயமுஞ் சிறியதாகத் திரவியக்குவைகளை அதிகமாகக் குவித்துவைத்து—ஈகையின் ஏக்கழுத்தம் மிக்குடைய - அவைகளை அள்ளிக் கொடுத்தலினும் இறுமாப்புக் கொடுத்தலை பெரிதுமுடையதாகும். எ-று.

அரசனிடத்திலே பெரும்பொருள் பெறுதலினும் அவனாலே நன்குமதிப்பு பெறுதல் ஒருவருக்கு மிக்க இறுமாப்பினைக் கொடுக்குமெனபது கருத்து.

வெளியிடமெல்லாம் பிடித்துப் பரந்துகிடக்கும் பெருங்குவை யெனபது அறிவித்தற்கு மாகஞ்சிறுக என்றார். ஏக்கழுத்தமுடைமையாவது அரசன நம மேலே பிரியமுடையவனுயிருக்கின்றான் இனி நமக்கு யாதுங் குறைவில்லை யாமொன்றுக்கு மஞ்சோமென்று களித்து மேலே கிளர்ச்சிகொள்ளுதல. ஏக்கழுத்தம் - தலையெடுப்பு. (கஅ)

## அடைந்தோர்ப்புரத்தல்.

களைகணுத் தம்மடைந்தார்க் குற்றுழியு மற்றோர்
வினைவுன்னி வெற்றடம்பு தாங்கார்—தளர்நடைய
தூனுடம பென்று புகழுடம் போமபுதற்கே
தானுடம் பட்டார்க டாம்.

(இ-ள்.) ஊனுடம்பு தளர்நடையது என்று - இறைச்சியாலாகிய இவ்வுடம்பு பிணி மூப்பு முதலியவைகளாலே தளர்ந்தழியுந் தன்மையுடையதென்று அதனைப் பேணுதலிட்டு—தாம் புகழுடம்பு ஓம்புதற்கே உடம்பட்டார்கள் - தாம் புகழாகிய உடம்பினைப் பேணிக்கொள்ளுதற்குத் துணிந்துடன்பட்டவர்கள்—உற்றுழி களைகண் ஆ தம் அடைந்தார்க்கு - ஓரிடருற்றுழி அவ்விடரினின்று காக்கும் பற்றுக்கோடாகக் கருதித் தம்மையடைந்தவருக்குப் பயனுக்காது—மற்று ஓர் விளைவு உன்னி - வேறொரு பிரயோசனங் கருதி—வெற்றுடம்பு தாங்கார் - வெறுமையாகிய இவ்வுடம்பினைப் பாதுகாத்துக்கொள்ள நினையார். எ-று.

இசைபடவாழ்தலை விரும்புவோர் தம்முடம்பை விட்டாவது பிறர்துயரை நீக்கிப் புகழை நிலைபெறுத்துவரென்பது கருத்து.

உம் - அசை. விளைவு - விளையும்பயன். "எவரெனினுமிடருற்றனராகி - யோவிலருறையொன்றுளரேலதுமுடித்தற - காவிவிடினுமறவே" என்பது கந்தபுராணம். (௩௯)

வலியுமானமும்.

தம்முடை யாற்றலு மானமுந் தோற்றுத்தம்
இன்னுயி ரோம்பினு மோம்புக—பின்னாச்
சிறுவரை யாயினு மன்றித் தமக்காங்
கிறுவரை யில்லை யெனின்.

(இ-ள்.) தம்முடை ஆற்றலும் மானமும் தோற்று - (ஒருவர்) தம்முடைய வலிமையையும் பெருந்தகைமையையுமிழந்து—தம் இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக - தம்முடைய இனிய உயிரைக் காப்பாராயினும் அங்ஙனமே காக்க—பின்னா சிறுவரை ஆயினும் அன்றி தமக்கு ஆங்கு இறுவரை இல்லையெனின் - பின்னர் ஒருகணப்பொழுதாவது நிச்சயமாகத் தமக்கு அவ்வுயிர் இறவாதிருக்குமென்று துணியப்படுமாயின். எ-று.

வலியும் மானமும் உயிரினும் காத்தற்பாலனவென்பது கருத்து.

மானமாவது தனதுநிலையிற் றாழாது, பிறரானீக்குதற்கரிய இடரை நீக்குதன் முதலிய அருஞ்செயலாற் பெறும் பெருந்தகைமை. அதனை உயிர்விடுத்தாவது காத்தல்நன்று. "மருந்தோமற்றூனோம்பும் வாழ்க்கைபெருந்தகைமை பீடழியவந்தவிடத்து" என்பது வள்ளுவர். இறுவரை - மரணகாலம். (௪௦)

மானங்காப்பவர்.

கலனழிந்த கற்புடைப் பெண்டிரு மைந்து
புலனொருங்கப் பொய்யொழிந் தாருங்—கொலைநாட்பின்
மொய்ம்புடை வீரரு மஞ்சார் முரண்மறலி
தும்பை முடிசூ டினும்.

(இ-ள்.) கலன் அழிந்த கற்புடைப் பெண்டிரும் - மங்கலநாணிழந்து விதவைகளாயிருக்குங் கற்புடைமகளிரும்—ஐந்து புலன் ஒருங்க பொய் ஒழித்தாரும் - ஐம்புலன்களும் ஒரேவழியிற் செல்லவிட்டுப் பொய்யாகிய உலகப்பற்றினை முற்றத் துறந்தவரும்—கொலை நாட்டின் மெய்ம்மையுடை வீரரும் - கொலைத்தொழிலைச்செய்யும் யுத்தத்திலே வலிமையுடைய வீரரும்—முரண் மறலி தும்பை முடி சூடினும் அஞ்சார - வலிமையுடைய இயமன் தும்பைமாலை சூடிவரினும் பயப்படமாட்டார். எ-று.

கற்புடைய அமங்கலிகளும் துறவிகளும் போர்வீரரும் மரித்தற்குமஞ்சாது தம்மானத்தினைக் காப்பரென்பது கருத்து.

போர்க்குச் செல்வோரணியுமாலையாகிய தும்பைமாலையைச் சூடுதல் பற்றி இயமன உயிர்கவர வருதல் துணியப்படும். (௫௧)

## உடல்விடுதற்கஞ்சாதவர்.

புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங்
கழிமுடை நாற்றத்த வேனும்—விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோ டுதற்கு.

(இ-ள்.) விழலர் - நல்லுணர்வில்லாத வீணர்—புழு நெளிந்து புண் அழுகி - (தமமுடம்பு) புழுக்கள் நெளியப்பெற்று புண்கள் அழுகுதலால்—யோசனை நாறும் கழிமுடை நாற்றத்தவேனும் - யோசனை தூரத்துக்கு நாறுகின்ற மிக்க முடைநாற்றத்தை யுடையதாயினும்—விளிவு உன்னி வெய்துயிர்ப்பர் - அவ்வுடம்பு அழிதலைக்கருதித் துக்கித்துப் பெருமூச்சுவிடுவார்—மெய் பயன்கொண்டார் சுமைபோடுதற்கு சுளியார் - மெய்யாகியபயனைப் பொருளாகக்கொண்ட அறிஞர் உடம்பாகிய சுமையைக் கைவிடுதற்கு வெறுப்புக்கொள்ளார். எ-று.

நல்லுணர்வில்லாதவீணரன்றி மெய்ப்பயனுடையவர்கள் இறத்தற்கஞ்சாரென்பது கருத்து. (௫௨)

## அரசனெப்படிகுடிகளுமப்படி.

இகழி னிகழ்ந்தாங் கிறைமக னொன்று
புகழினு மொக்கப் புகழ்ப—இகன்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செய்யும்
நீர்வழிப் பட்ட புணை.

(இ-ள்.) இறைமகன் ஒன்று இகழின் இகழ்ந்து - அரசன் ஒன்றினை இகழ்தற்கண் தாமுமிகழ்ந்து—ஆங்கு புகழினும் ஒக்க புகழ்ப - அப்படியே புகழ்தற்கண்ணுந் தாமுங்கூடப் புகழுவார்கள்—மன்பதை இகல் மன்னன் சீர்வழிப்பட்டதே - மக்கட்பரப்பு வலிய அரசனுடைய காந்தி செல்லும் வழியிலே அமைந்ததாகும்—(அதற்குத் திருட்டாந்

தம்) நீர்வழி பட்ட புணை என் செய்யும் - நீர்பெருகிச்செல்லும் வழியிலகப்பட்ட தெப்பமானது நீரோடு கூடச்செல்லாது வேறெங்கே போகும்? எ-று.

அரசனெப்படி நடப்பானோ அப்படியே குடிகளும் நடப்பார்களென்பது கருத்து.

காந்தியாவது அரசனுறங்கினுஞ் சென்றுலகங்காக்குமவனது கடவுட்டன்மை. "உறங்குமாயினும் மன்னவன்றன்னொளி கறங்குதெண்டிரை வையகங் காக்குமால்" என்பது சிந்தாமணி. (௩௩)

அமைச்சு.

செவிசுடச் சென்றாங் கிடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் போரா—கவுண்மதத்த
கைம்மா வயத்தவே பாகுமற் றெத்திறத்தும்
அம்மாண் பினவே யமைச்சு.

(இ-ள்.) சென்று செவி சுட இடித்து அறிவு மூட்டி - சமீபமாகப்போய்க் காதிலே சுடும்படி நெருக்கி அறிவைக் கொளுத்தி—வெகுளினும் வாய் வெரீஇ போரா - தமையேலே கோபித்தாலும் பயந்து விட்டுப்போகார்—பாகு எத் திறத்தும் கவுள் மதத்த கைம்மா வயத்தவே - பாகர்கள் எவ்விதத்தாலும் கன்னமதத்தையுடைய யானையின்வசமாகி அதனை நடத்துபவரேயாவர்—அமைச்சு அம் மாண்பினவே - அமைச்சரெனப்படுவோரும் அவவாறே அரசன்வசமாயொழுகி அவனைத் தீநெறியில விடாது நடத்துபவரேயாவர். எ-று.

அரசன் கோபித்தபோதும் அவனைவிட்டு நீங்காதுநின்று நற்புத்திகூறுவோரே அமைச்சரெனப்படுவாரென்பது கருத்து.

ஆங்கு - அசை. யானை தீயவழிச்செல்லும்போது பாகர் விலக்குதல்போல அமைச்சரும் அரசர் வழிவிலகும்போது அறிவுகொளுத்தி நல்வழியில்விடல் வேண்டும். "மன்னவர்செவியழன் மடுத்ததாமென நன்னெறிதருவதோர் நடுவுநீதியைச் சொன்னவரமைச்சர்கள்" என்பது கந்தபுராணம். (௩௪)

அரசனைச்சேர்ந்தொழுகல்.

கைவரும் வேந்த னமக்கென்று காதலித்துச்
செவ்வி தெரியா துரையற்க—வெவ்வொருகால்
எண்மைய னேனு மரியன் பெரிதம்மா
கண்ணில னுள்வெயர்ப்பி னான்.

(இ-ள்.) வேந்தன் நமக்கு கைவரும் என்று - அரசன் நமக்கு அமைவானென்று கருதி—காதலித்த செவ்வி தெரியாது உரையற்க - சொல்லவிரும்பியவைகளைக் காலம்நோக்காமற் சொல்லுதலை ஒழிக—ஒவ்வொருகால் எண்மையனேனும் - சிலசிலபோது காட்சிக்கெளியனாய்க் காணப்பட்டானேனும்—பெரிது அரியன் - பெரும்பாலும் காண்டற்கும் பேசுதற்குமரியனவன்—கண்ணிலன் உள்வெயிர்ப்பினான் - கண்ணோட்டமில்லாதவன், உள்ளத்தே சினமுமுடையவன். எ-று.

அரசனோடு பேசும்போது ஏற்றகாலமறிந்து பேசுதல்வேண்டுமென்பது கருத்து.

அரசன் தன்தருமத்தை முடிக்கும்படி அடிக்கடி பலவடிவங்கொள்ளுவான் என மனுக் கூறுதலால் முன்னர்ப் பழக்கம்பற்றிக் கைவரும் என்றெண்ணல் பழுதாம். "குறிப்பறிந்து காலங்கருதி வெறுப்பில் வேண்டுப வேட்பச் சொலல்" என்பது வள்ளுவர். (சரு)

அரசகோபம்.

பழமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமை பிறிதொன்றுங் கொள்ளார்—வெகுளின்மன்
காதன்மை யுண்டே யிறைமாண்டார்க் கேதிலரு
மார்வலரு மில்லை யவர்க்கு.

(இ-ள்.) பழமை கடைப்பிடியார் - பழநட்பினையும் மனத்திற் கொள்ளார்—கேண்மையும் பாரார் - உறவாந்தன்மையினையும் நோக்க மாட்டார்—கிழமை பிறிது ஒன்றும் கொள்ளார் - உரிமையாயுள்ளன வேறொன்றையுங் கொள்ளார்—வெகுளில் இறைமாண்டார்க்கு காதன்மை உண்டே - கோபமுறுவாராயின் நடுநிலையிற்சிறந்த அரசர்க்கு ஒருவர்மேலே விருப்பமாந்தன்மையு முளதாகுமா?—அவர்க்கு ஏதிலரும் ஆர்வலரும் இல்லை - அரசருக்கு வெறுப்புள்ளவருமில்லை. விருப்புள்ளவருமில்லை. எ-று.

அரசர் கோபிப்பாராயின் இவருறவர் இவர்பகைவரென ஒன்றும் நோக்காரென்பது கருத்து.

பழமை - பழையராந்தன்மைபற்றிவந்த நட்பு. "மன்னரையடைந்துவாழ்தல் வஞ்சநஞ்சுடையநாகந் தன்னொடுகூடிவாழுந்தன்மை" என்பது வாதவூரர் புராணம். (சசு)

அரசர்புறங்கடைகாத்தல்.

மன்னர் புறங்கடை காத்தும் வறிதேயாம்
எந்நலங் காண்டுமென் றெள்ளற்க—பன்னெடுநாட்
காத்தவை யெல்லாங் கடைமுறைபோய்க் கைகொடுத்து
வேத்தவை மிக்குச் செயும்.

(இ-ள்.) யாம் மன்னர் புறங்கடை வறிதே காத்தும் - நாம் அரசருடைய கடைவாயிலே வீணாகக் காத்துநின்றேம்—எ நலம் காண்டும் என்று எள்ளற்க - அவ்வாறு காத்துநின்றும் எந்த நன்மையைப் பெற்றேம் என்றிகழாதொழிக—நெடுநாள் காத்தவை எல்லாம் - மிகப் பல நாளாகக் காத்துநின்றனவெல்லாம்—கடை முறை போய் - அரசன் மனத்திலே கிடந்து இறுதிமுறையிற் போய்—கைகொடுத்து வேத்தவையின் மிக்கு செயும் - கைகொடுத்துத் தூக்கிக்கொண்டுபோய் அரசசவையிலே யார்க்கும் மேலேயிருத்துதலைச் செய்யும். எ-று.

அரசரையடுத்துநின்று பலநாட் சேவிப்போரே பெருமைபெறுவரென்பது கருத்து.

அரசரும் மகளிரும் அடுத்துநின்று சேவிப்போரையே பற்றுவர். "மன்னர் திருவு மகளிரெழிலுமுர் துன்னியார் துய்ப்பர்" என்பது நாலடியார். (௬எ)

## முயற்சி.

உறுதி பயப்ப கடைபோகா வெனினும்
இறுவரை காறு முயல்ப—இறுமுயிர்க்கும்
ஆயுண் மருந்தொழுக்க றீதன்ற லல்லனபோ
லாவனவு முண்டு சில.

(இ-ள்.) உறுதி பயப்ப கடைபோகா எனினும் - (தாம் செய்யத் தொடங்கிய காரியம் அநுகூலமாகுமென்னும்) நிச்சயத்தைக் காண்பிப்பனவாய்ச் செல்வனவல்லவாயினும்—இறுவரை காறும் முயல்ப - அதன் முடிவுபரியந்தம் விடாது செய்வார்கள்—இறும் உயிர்க்கும் ஆயுண்மருந்து ஒழுக்கல் தீது அன்று - இறக்குமெலத் துணியப்பட்ட உயிர்க்குத்தானும் சீவனைக்கொடுக்கும் மருந்தை வாயின்கண் வார்த்தல் குற்றமன்று—அல்லன போல் ஆவனவும் சில உண்டு - அநுகூலமாகாதனபோலக் காணப்பட்டுப் பின்னர் அநுகூலமாவனவுஞ் சிலவுள ஆதலால். எ-று.

எடுத்துக்கொண்டகாரியத்தை அநுகூலப்படுவதாகத் தோற்றவில்லையென்றிடையில்விடாமல் முடிவுபரியந்தஞ் செய்துபார்க்கவேண்டுமென்பது கருத்து.

கடைபோகா என்புழிக் கடை என்பது தலைப்பிரிதல் கால்சீத்தல் என்பனவற்றிற் தலை கால் என்பனபோல நின்ற ஓரிடைச்சொல். "இசையாதெனினு மியற்றியோராற்ற லசைவின்றிநிற்பதாமாண்மை" என்பது நாலடியார். (௬அ)

## முயற்சிசெய்யாமை.

முயலாது வைத்து முயற்றின்மை யாலே
உயலாகா வூழ்த்திறத்த வென்னார்—மயலாயும்
ஊற்றமி றாவிளக்க மூழுண்மை காண்டுமென்
றேற்றா ரெறிகான் முகத்து.

(இ-ள்.) முயலாது வைத்து - (அறிஞர்) முயற்சிசெய்யாது விட்டு—முயற்று இன்மையாலே உயலாகா - முயற்சியின்மையாலே உய்வுபெற்றநுகூலமாகாத காரியங்களை—ஊழ்த்திறத்த என்னார் - ஊழின்பகுதியாலே உய்யவில்லையென்று கொள்ளமாட்டார்—ஊழுண்மை காண்டும் என்று - ஊழ்வினை உளதென்பதைப் பார்ப்போமென்று கருதி—மயலாயும் - மயங்கித்தானும்— ஊற்றமில் தா விளக்கம் - அசைவின்றிநிற்குந் தன்மையில்லாத ஒளிபொருந்திய விளக்கினை— எறி கால் முகத்து ஏற்றார் - அடிகாற்றுக்கெதிரே வைக்கமாட்டார். எ-று.

அறிஞர் தம்முயற்சியின்மையாலே பிரதிகூலமான காரியத்தை ஊழ்வினையாலாயிற்றென்று சொல்லார் என்பது கருத்து. முயற்சியினால் ஊழினையும் வெல்லலாமென்பது பிற்செய்யுளாற் பெறப்படும். (௪௯)

விதியையும்வெல்லுமுயற்சி.

உலையா முயற்சி களைகணா வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே—உலகறியப்
பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த
கான்முளையே போலுங் கரி.

(இ-ள்.) உலையா முயற்சி களைகணா - நிலைபெறுன முயற்சியே பற்றுக்கோடாக—ஊழின் வலி சிந்தும் வன்மையும் உண்டே - விதியின் வலிமையைக் கெடுத்து மேற்படுகின்ற சாமர்த்தியமும உள்ளதாகும்—உலகு அறிய பால் முளை தின்று மறலி உயிர் குடித்த கான்முளையே கரி - உலகத்தார்க்குப் பிரசித்தமாகப பலவகையாக வரும் பிறவியென்னும முளையைந் தனக்கின்மையாக்கி இயமனுடைய உயிரையுமழித்த மார்க்கண்டேயராகிய புத்திரரே அவ்வுணமைக்குச் சான்றுவா. எ-று.

முயற்சியினாலே விதியையும் வெல்லுதல் கூடும் என்பது கருத்து.

பதினாறு வயசென்னும் நியதியைத் தமது தவத்தினாலவென்று சிரஞ்சீவித் தன்மைபெற்ற மார்க்கண்டேய முனிவருடையமுயற்சி இங்கே உதாரணமாயிற்று. உலையாமுயற்சி - அசைவில்லாதமுயற்சி. உயிர்குடித்தவர் சிவபிரானேயெனினும் இவா காரணமாதல்பற்றி இவர்செயலாக உயிர்குடித்த என உபசரித்தார். போலும் - அசை. (௫0)

தெரிந்துசெய்தல்.

கால மறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூல மறிந்து விளைவறிந்து—மேலுந்தாஞ்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும்.

(இ-ள்.) காலம் அறிந்து - காலத்தினையுமறிந்து—இடம் அறிந்து- இடத்தினையுமறிந்து—செய் வினையின் மூலம் அறிந்து - செய்யக்கருதிய காரியத்திற்கு வேண்டுங் காரணங்களையுமறிந்து—விளைவு அறிந்து - செய்து முடிந்தபின் அதனாற்பெறும் பயனையுமறிந்து—மேலும சூழ்வன தாம் சூழ்ந்து - அதன்பின்னும ஆலோசிக்கப்படுவனவற்றையும் தாம் ஆலோசித்து—துணைமை வலி தெரிந்து - துணையாயுள்ளோர் வலிமைகளையுந் தெரிந்து—ஆள்வினை ஆளப்படும - (அதன்பின்) முயற்சி செய்யப்படும். எ-று.

காலம் இடம் முதலியன தமக்கு வாய்ப்புடையனவாயின்; கருதிய காரியத்தைச் செய்யமுயல்க என்பது கருத்து.

இது பெரும்பாலும் போர்த்தொழின்முயலும் அரசர்பொருட்டுக் கூறப்பட்டது. காலமறிதலாவது தமக்கும் பகைவர்க்கும் ஆகுங்காலம் ஆகாதகாலம் என இருவகைகளையுமறிதல். தமக்காகுங் காலமாவது பொருண் முதலிய குறையின்றி மகிழ்ச்சிமிகுந்திருக்குங்காலம். இடமறிதலாவது தமக்கும் பகைவர்க்கும் வெல்லுதற்குத் தக்கவிடமுந் தகாதவிடமுமறிதல். வினையின்மூலமறிதலாவது வினைநிகழ்ச்சிக்கு இன்றியமையாத காரணமாயுள்ள கஜ ரத துரக பதாதிகளுடைய வலியையும், ஏவல்செய்வோர், சேனைத்தலைவர் என்பவர்களுடைய வலியையும், உணவு, தண்ணீர்முதலிய வலியின் காரணங்களையுமறிதல். வினையின் மூலமறிதலென்பதற்கு வினையினது தொடக்கம் தக்கதோ தகாததோ எனவறிதலென்பாருமுளர். மேலும் சூழ்வனசூழ்தலாவது தொடங்குங்காரியத்திற்கு வருமிடையூறுகளையும் அவற்றினை நீக்குமுறையையும் வெல்லுமுறையையு மாலோசித்தறிதல். "வலியேகால மிடமிவற்றன் மாற்றான்றனக்கு முனக்குமுள பலவாநிலையும் வினைதொடங்கும் பண்புமதற்கா மிடையூறும் - விலகாதவனை விலக்குவதும் வெல்லுமாறும் வென்றதனு லுலவாப்பயனு முதலனைத்து மோர்ந்துதெளிந்தே வினைசெய்க" என்பது விநாயகபுராணம். (௫௧)

## கருமஞ்செய்யுங்கருத்தினர்.

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

(இ-ள். கருமமே கண்ணாயினார் - தம்மாலே தொடங்கப்பட்ட காரியத்தினையே முடிக்கவேண்டுமென்று கருதிக்கொண்டவர்—மெய் வருத்தம் பாரார் - சரீரவருத்தத்தினையுங் கருதார்—பசி நோக்கார் - பசியினையுங் கருதார்—கண் துஞ்சார் - நித்திரையையுங் கருதார்—எ எவர் தீமையும் பாரார் - எவரெவர்செய்யுந் தீங்குகளையும் பொருட்படுத்தி அவற்றிற்கு மாறுசெய்யக் கருதார்—செவ்வி அருமையும் பாரார் - காலத்தின் அருமையையுங் கருதார்—அவமதிப்பும் கொள்ளார் - பிறரவமதித்தலையுங் கருதார். எ-று.

செய்யத்தொடங்கிய காரியத்தினை முடித்துப் பயன்பெறக்கருதினவர் சரீரவருத்தமுதலியவைகளைப் பொருட்படுத்தி வினைக்கெடலாகாதென்பது கருத்து.

சரீரவருத்தம் பசி முதலியவைகளைக் கருதி அவை நீக்குதற்கு முயல்வாராயின்; தொடங்கிய காரியம் இடையூறெய்தி முடிவுபெறாதென்க. இலகுவிலே நீக்கத்தக்க தீங்கினையும் பொருட்படுத்தாரென்பது தோன்ற எவ்வெவர் தீமையுமென்றார். காலத்தினருமையாவது தங்காரியத்திற் கொவ்வாது காலம் மாறுதல். கண்ணல் - கருதல். அது கண் என முதனிலைமாத்திரையாய் நின்றது. கண்ணாயினார் என்பதற்குக் கண்ணாகக்கொண்டவர் என்பாருமுளர். (௫௨)

## சிறுபகையோம்பல்.

சிறிய பகையெனினு மோம்புத றேற்றார்
பெரிதும் பிழைப்பா டுடையர்—நிறைகயத்
தாழ்நீர் மடுவிற் றவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது.

(இ-ள்.) பகை சிறிய எனினும் ஓம்புதல் தேற்றார் - பகைகள் சிறியனவாயினும் அவற்றினின்றும் விலகித் தம்மைக் காத்துக்கொள்ளுதலை அறியாதவர்—பெரிதும் பிழைப்பாடு உடையர் - அதிகமாகப் பிழைபடைதலையுடையராவர்—நிறை கயம் தாழ் நீர் மடுவில் - நிறைந்த நீரையுந் தாழ்ந்தன்மையையுமுடைய மடுவிலே—தவளை குதிப்பினும யானை நிழல் காண்பு அரிது - தவளை குதித்தாலும் யானையின் நிழலைக் காணுதல் அரிதாகும்- எ-று.

பகை சிறிதென்று அவமதித்தலாகாதென்பது கருத்து. "பஞ்சியின் மெல்லிதேனும் பகைசிறிதென்ன வேண்டா - அஞ்சித்தற்காக்கவேண்டு மரும்பொருளாக வென்றான்" என்பது சிந்தாமணி.

தவளை குதித்தலால் நீர் கலங்குதல்பற்றிக் காண்பரிதென்றார். கயம் - நீர். 'குளமுமாழமு நீருங்குறையுங் களிறும்பெருமையு மேன்மையுங் கயமெனல்" என்பது பிங்கலம் தாழ்நீர் - கீழே ஆழ்ந்துபோகுந்தன்மை. (௫௩)

உட்பகை.

புறப்பகை கோடியின் மிக்குறினு மஞ்சார்
அகப்பகை யொன்றஞ்சிக் காப்ப—அனைத்துலகும்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலுங் காமப் பகை.

(இ-ள்.) புறப்பகை கோடியின் மிக்கு உறினும் அஞ்சார் - புறப்பகை கோடியென்னுந் தொகையினும் மிகப்பலவாகி வருமாயினும் அதற்குப் பயப்படமாட்டார்—அகப்பகை ஒன்று அஞ்சி காப்ப - அகப்பகை ஒன்று தான் தனியேவரினும் அதனை அஞ்சி அஃதணுகாமல் அறிஞராயுள்ளோர் தமமைக் காத்துக்கொள்வர்—(அதற்குத்திருட்டாந்தம்) அனைத்துலகும சொல் ஒன்றின் யாப்பார் - எல்லாவுலகினையுந் தம்முடைய சொல்லொன்றினாலே கட்டிக்கொள்ளவல்ல முநிவர்தாமும்—காயப்பகை பல்காலும் ஓம்பி பரிந்து காப்ப - காமமாகிய உட்பகையினைப் பலமுறையும் பேணி வருந்தியும் அணுகாது காத்துக்கொள்வர். எ-று.

சிறிதாயிருந்தாலும் அகப்பகையை அவசியங்களைதல்வேண்டு மென்பது கருத்து. "எட்பகவன்ன சிறுமைத்தேயாயினு முட்பகையுள்ளதாங்கேடு" என்பது வள்ளுவர்.

புறப்பகை புறத்திலே வெளியாய் நிற்கும்பகை. அகப்பகை உறவுபோலக் காட்டி உள்ளாய்நிற்கும்பகை. கட்டிக்கொள்ளல் - வசப்படுத்தல். பரிந்தும் என்புழி உம்மைதொக்கது. (௫௪)

கூடாநட்பு.

புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறுதல் வேண்டும்—கழிபெருங்
கண்ணோட்டஞ் செய்யேல் கருவியிட் டாற்றுவா
புண்வைத்து மூடார் பொதிந்து.

(இ-ள்.) புறம் நட்டு அகம் வேர்ப்பு ஆர் நச்சு பகைமை வெளியிட்டு - புறத்திலே நட்புச்செய்து உள்ளே புழுங்குதனிறைந்த நஞ்சுபோலும் பகையினுடைய தன்மையை வெளியாக்கி—வேறுதல் வேண்டும் - அதனோடொன்றுது தூரமாதல்வேண்டும்—கழி பெரும் கண்ணோட்டம் செய்யேல் - (அவ்வாறுய பகையின்மேலே) மிகப் பெரிய கண்ணோட்டஞ் செய்யற்க.—(அதற்குத் திருட்டாந்தம்) புண் கருவியிட்டு ஆற்றுவார் பொதிந்து வைத்து மூடார் - புண்ணினை ஆயுதங்களைப்புகுத்தி அறுத்துக் கீறித் தணியச்செய்வார்கள்; அதுவன்றி ஒன்றினாலே பொதிந்து மூடிவைக்கமாட்டார். எ-று.

களையாமல் அசட்டையாக விடப்பட்ட அகப்பகை வளர்ந்து மிகப்பெருந் தீங்குசெய்து தம்மைக்கெடுக்குமென்பது கருத்து.

கழிபெரும் என்னும் ஒருபொருட்பன்மொழி கண்ணோட்டத்தின் சிறப்புணர நின்றது. கண்ணோட்டம் - தாட்சிண்ணியம். தாட்சிண்ணியமாவது கண்ணுக்கு எதிர்ப்படுவோனுடைய விருப்பம் அநுகூலமாதற்குத் துணையாகச் செல்லும் பெருந்தகைமைக்குணம். பரிமேலழகர் கண்ணோட்டமாவது, "தன்னோடு பயின்றாரைக்கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை, இஃது அவர் கண் சென்றவழி நிகழ்வதாதலின், அப்பெயர்த்தாயிற்று" என்பர். கண்ணோட்டம் வாயிலாகப் பின்னும் உட்புகுதல்பற்றிக் கண்ணோட்டஞ்செய்யேல் என்றார். ()

தீயநட்பு.

நட்பிடைக் குய்யம்வைத் தெய்யா வினைசூழ்ந்து
வட்கார் திறத்தராய் நின்றார்க்குத்—திட்பமா
நாளுலந்த தன்றே நடுவ னடுவின்மை
வாளா கிடப்பன் மறந்து.

(இ-ள்.) நட்பிடை குய்யம் வைத்து - தமக்கு நண்பனிடத்திலே கபடஞ்செய்து—எய்யா வினை சூழ்ந்து - பிறராலறியப்படுதற்கரிய தீவினைகளைச் செய்யும்படியாலோசித்து—வட்கார் திறத்தாராய் நின்றார்க்கு - (உள்ளே) பகைவர்பக்கத்தாராய் நின்றவர்களுக்கு—திட்பமா நாள் உலந்தது அன்றே - நிச்சயமாக நியமகாலமாகிய வாழ்நாள் முடிந்ததல்லவா— நடுவன் நடுவின்மை மறந்து வாளா கிடப்பன் - (அவருடம்பு வீழாததென்னையெனின்;) நடுநின்று முடிவுசெய்பவனாகிய இயமன் அவருயிரைப் பிரிக்கும் நீதிச்செயலைச் செய்யானையாகிய நடுநிலையின்மை தன்கண் நிகழ்தலை மறந்து சுமமாகிடப்பன். எ-று.

உறவுபோலக்காட்டி உள்ளேநின்று பிறர்க்குத் தீங்குசெய்வோர் விரைந்து கெடுவரென்பது கருத்து.

மிகமறைவிற் செய்யப்படுவதாய்ப் பிறர்க்குப் புலப்படாமைபற்றி எய்யாவினை என்றார். எய்த்தல் - அறிதல். (ருசு)

மனநலமுடையார்.

மனத்த கறுப்பெனி னல்ல செயினும்
அனைத்தெவையுந் தீயவே யாகும்—எனைத்துணையும்

தீயவே செயினு நல்லவாக் காண்பவே
மாசின் மனத்தி னவர்.

(இ-ள்.) கறுப்பு மனத்த எனின் நல்ல செயினும் - ஒருவன்மேலேகொண்ட சினக்குறிப்பு மனத்திற்கிடக்குமாயின் அவன் தமக்கு நல்லனசெய்தானாயினும்—அனைத்து எவையுந் தீயவே ஆகும் - அந்த நற்செயல்களெல்லாம தீச்செயல்களாகவே காணப்படும்—மாசு இல் மனத்தினவர் - குற்றமில்லாத மனமுடையவர்—எனைத்துணையும் தீயவே செயினும நலல ஆ காண்ப - எவ்வளவோ அதிகமாகப் பிறர் தமக்குத் தீயனவற்றையே செய்தாராயினும் அவையெல்லாம் நல்லனவாகக் காண்பர். எ-று.

பிறர்செய்த தீமையை மனத்திலே நினைத்திருத்தலாகாதென்பது கருத்து. 'நன்றல்லதன்றே மறப்பதுநன்று'' எனவும், ''மனத்துக்கண் மாசிலனாதலனைத்தறன்'' எனவும் வள்ளுவருங் கூறுவர்.

மாசு வெகுளி, வைரம், பொறாமை, அவா முதலியன. இவை மனத்திலே கிடக்குமாயின்; நன்மைதீமைகளை உள்ளவாறறியவிடாது மறைக்கும். ''காரம் பட்டுழி நல்லவுந்தீயவாந் - தீரக்காய்ந்துழி நல்லவுந்தீயவாம் - ஒரும்வையத் தியற்கையன்றோவெனு வீரவேனெடுங்கண்ணி விளம்பினள்'' என்பது சிந்தாமணி. கறுப்பு என்பதற்கு கறையெனப்பொருள்கொண்டு அழுக்கு மனத்திற் கிடக்குமாயின்; என உரைத்தலும் பொருந்தும். (௫௭)

இனியவருமின்னாரும்.

இனியவ ரென்சொலினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியுங் கடுவே—அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும்.

(இ-ள்.) இனிபவர் என் சொலினும் இன்சொல்லே - நற்குணநற்செயல்களையுடையவராகிய நல்லோர் யாதுசொன்னாராயினும் (கடுஞ்சொற்கூறினுமென்றபடி) பின்னர் நன்மைபயத்தலால் இனிய சொல்லேயாகும—இன்னார் கனியும மொழியும் கடுவே - தீயவருடைய கனிந்த சொல்லும பின்னர்த் துன்பம்பயத்தலாற் கடுஞ்சொல்லேயாகும்—(அதற்குத்திருட்டாந்தம) அனல் கொளுந்தும் வெங்காரம வெய்து எனினும நோய் தீர்க்கும - அனல்பற்றிய வெங்காரமானது முன்னர் வெமமை கொடுபபதாகக் காணப்படினும் நோயினை நீக்கிப் பின்னர்ச் சுகமாகிய குளிர்மையைச்செய்யும்—சிங்கி மெய்பொடிப்ப குளிர்ந்தும் கொலும் - நஞ்சானது சரீரத்திலே புளகமுண்டாகுமாறு குளிர்ச்சி செய்து நின்றும் பின்னர் இன்னாவாகிய கொல்லுதலைச் செய்யும். எ-று.

பிற்பயனோக்காது நல்லோருடைய கடுஞ்சொல்லை வெறுத்தலுந் தீயோருடைய இன்சொல்லையுவத்தலுமாகாதென்பது கருத்து. ''மாசற்றநெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர் பேசுற்றவின்சொல்பிறிதென்க'' என்பது நன்னெறி. வெங்காரம் - ஒருவகையுப்பு. (௫௮)

பொய்குறளை வன்சொற் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காத்து—மெய்யிற்
புலமைந்துங் காத்து மனமா சகற்றும்
நலமன்றே நல்லா றெனல்.

(இ-ள்.) சொல்லின் வழு பொய் குறளை வன்சொல் பயனில என்ற இந்நான்கும் எய்தாமை காத்து - சொற்குற்றமாகிய பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என்று சொல்லப்பட்ட இவை நான்கும் வந்தடையாமற் பாதுகாத்து—மெய்யில் புலம் ஐந்தும் காத்து - சரீரத்திலுள்ள ஐம்பொறிகளுக்குமுரிய புலன்கள் ஐந்தினையுந் தீயனவாகாமற் காத்து—மனமாசு அகற்றும் நலமன்றே நல்லாறு எனல் - மனவழுக்கினையும் நீக்குகின்ற நன்மையல்லவா நன்னெறி எனச் சொல்லப்படுவது. எ-று.

மனம் வாக்கு காயமென்னும் மூன்றினாலுங் குற்றம் வாராது நடப்பதுவே நன்னெறியென்பது கருத்து.

குறளையாவது காணாதவழிப் பிறரையிகழ்ந்துகூறுதல், உறவுசெய்தறிந்த இரகசியங்களை வெறுப்புவந்துழிக் கூறுதல் முதலியன. நீதியாகிய நயமின்மையாற் பயனில்சொல்லுங் குற்றமாயிற்று. மனவழுக்காவன வெகுளி, பொறாமை, பேரவா முதலியன. (ருக)

நல்வழியினிற்போர்.

நல்லா றொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னுவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ்.

(இ-ள்.) நல்லாறு ஒழுக்கின்றலை நின்றார் - நல்வழியிற் செல்லுதற்கண் நின்றவர்களாகிய பெரியோர்—நல்கூர்ந்தும் அல்லன செய்தற்கு ஒருப்படார் - வறுமையுற்றாராயினும் பாவச்செயல்களைச் செய்தற்கு உடன்படமாட்டார்—(அதற்குத் திருட்டாந்தம்) பல் பொறிய செங்கண் புலியேறு - பலபுள்ளிகளையும் செம்மையாகிய கண்களையுமுடைய புலியேறானது—அற பசித்தும் பைங்கண் புனத்த பைங்கூழ் தின்னா - மிகப் பசியுற்றபோதும் பச்சைக்கொல்லையிலுள்ள பயிர்களைத் தின்னுதற்கு விரும்பமாட்டா. எ-று

நல்லொழுக்கமுடையவர் வறுமைவந்துழித்தானும் பாவச்செயல்களைச் செய்தற்கு விரும்பாரென்பது கருத்து.

இங்கே நல்லாறென்றது முற்கவியிற் சொல்லப்பட்ட நலத்தை. "மெய்த் திருத்தவம் வீரம் படைக்கினு - மெத்திறத்திட ரெய்திய தாயினு - முத்தமக்குல மேன்மை யொழுக்கமார் - தத்தநீதி பிழைப்பர்கொல் சால்புளோர்." என்பது சேதுபுராணம். (சுo)

கூடாதசெல்வம்.

குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கொள்ளுந் திருவும்—தவம்விற்றூங்
கூனோம்பு வாழ்வு முரிமைவிற் றுண்பதூஉம்
தானோம்பிக் காத்த றலை.

(இ-ள்.) குலம் விற்று கொள்ளும் வெறுக்கையும் - ஒருவன் தன் குலத்தினைவிற்றுப் பெற்றுக்கொள்ளுஞ் செல்வமும்—வாய்மை நலம் விற்று கொள்ளும் திருவும் - சத்தியமாகிய நன்மையைவிற்றுப் பெற்றுக்கொள்ளுஞ் செல்வமும்—தவம் விற்று ஊன் ஓம்பும் வாழ்வும் - தவத்தினைவிற்றுப் பெற்று உடம்பைக் காத்தற்குக் காரணமான செல்வமும்—உரிமை விற்று உண்பதும் - உரிமையைவிற்றுப் பெற்று உண்ணப்படும் செல்வமும்—தான் ஓம்பி காத்தல் தலை - தன்னை அணுகாது பேணிக் காத்துக்கொள்ளுதல் உத்தமச்செயலாம். எ-று.

ஒருவன் தன்னுடைய குலம் சத்தியம் தவம் உரிமை என்பவைகளைத் திரவியநிமித்தம் கைவிடலாகாதென்பது கருத்து.

குலம்விற்றலாவது குலத்திற்குரிய ஒழுக்கம் இன்சொல் பணிவு முதலிய செயல்களைத் திரவியநிமித்தம் கைவிடுதல். வாய்மைநலம்விற்றலாவது பொய்மொழிகூறல் பொய்ச்சான்றுகூறல் முதலியவைகளைத் திரவியநிமித்தம் செய்தல். தவம்விற்றலாவது கூடாவொழுக்கம் தீமை களவு முதலிய தவவொழுக்கத்திற்கேலாதவைகளைத் திரவியநிமித்தம் செய்தல். உரிமைவிற்றலாவது திரவியநிமித்தம் பிறனுக்கடிமையாகித் தன்வசமிழந்து நிற்றல். வாழ்வு - செல்வம். அது, வாழ்தற்குக் காரணமாதல்பற்றி வாழ்வெனப்பட்டது. "வாழ்வெனுமையல்விட்டு வறுமையாஞ்சிறுமைதப்பி" என்னுஞ் சித்தியாரினும் வாழ்வென்பது இப்பொருட்டாதலறிக. ஊங்கு - அசை. (௬௧)

வஞ்சிப்போர்செல்வம்.

இடைதெரிந் தச்சுறுத்தி வஞ்சித் தெளியார்
உடைமைகொண் டேமாப்பார் செல்வம்—மடநல்லார்
பொம்மன முலைபோற் பருத்திடினு மற்றவர்
நுண்ணிடைபோற் றேய்ந்து விடும்.

(இ-ள்.) இடை தெரிந்து அச்சுறுத்தி வஞ்சித்து - சமயத்தின் வாய்ப்பறிந்து பயமுறுத்தி வஞ்சகஞ்செய்து—எளியார் உடைமை கொண்டு ஏமாப்பார் செல்வம் - எளியவருடைய பொருள்களை அபகரித்துக்கொண்டு தலையெடுப்புக்கொள்பவருடைய செல்வமானது—மடம் நல்லார் பொம்மல் முலை போல் பருத்திடினும் - இளம்பெண்களுடைய பூரிப்படைகின்ற முலைபோலப் பருக்குமாயினும்—அவர் நுண் இடை போல் தேய்ந்துவிடும் - அவருடைய சிற்றிடைபோலச் சிறிதாகத் தேய்ந்துபோகும். எ-று.

எளியாரை வருத்தி வஞ்சித்துக் கவர்ந்த திரவியம் வளர்வதுபோலக் காணப்படினும் விரைவில் அழிந்துவிடுமென்பது கருத்து. "களவினாலாகிய வாக்கமளவிறந்தாவதுபோலக்கெடும்" என்பது வள்ளுவர்.

தலையெடுக்கொள்ளலாவது சொற்செயல்களிலும் உடைநடைகளிலும் யாரினும் மேலாகத் தம்மைக்காட்டுதல். ஏமாப்பாரென்பதற்குக் களிப்பவர் என உரைப்பவருமுளர். (௬௨)

## பெற்றதைக்கைவிட்டுப்பெறாததைவிரும்பல்.

பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளுஞ்
சிற்றுயிர்க் காக்க மரிதம்மா—முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழன் மாயா திரா.

(இ-ள்.) பெற்ற சிறுக - தன்னாற் பெறப்பட்ட பொருள்களெல்லாம் அற்பமென்று பேணிக்கொள்ளாமல் வரவர அனுபவிக்கப்பட்டு மிகச் சிறிதாகக் குறைய—பெறாத பெரிது உள்ளும சிற்றுயிர்க்கு - பெறப்படாதனவாய பொருள்கள் (இனிவருவன) அதிகமென்றெண்ணி அதனைக்கருதியிருக்கும் அற்பவறிவுடைய உயிருக்கு—ஆக்கம் அரிது - மேன்மேலுயருந்தன்மை ஒருபோதும் உண்டாகாது—(அதற்குத் திருட்டாந்தம்) வர வர வாய்மடுத்து - வருந்தோறும் தன்வாயினுள்ளடக்கி—வல் விராய் முற்றும மாய - வலிய விறகுகள்முழுமையும் அழிந்தொழிய—எரிதழல மாயாதிரா - எரிகின்ற அக்கினியும் அழிந்தொழியும். எ-று.

பெற்றது போதுமென்றமைந்து அதனைப் பேணிக்கொள்ளாது சிதறிவிட்டுப் பின்னர்ப் பெரும்பொருள் வருமென்று கருதியிருப்பவனுக்கு ஆக்கமில்லை என்பது கருத்து.

சிறுக என்பது இதுநிகழாநிற்க இது நிகழ்ந்ததென்னும் பொருட்டாய் நிகழ்காலங்காட்டிநின்ற செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (௬௩)

## நீதிநெறியாற்பொருள்தேடல்.

தத்த நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே
ஒத்த கடப்பாட்டிற் றாளூன்றி—எய்த்தும்
அறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள்.

(இ-ள்.) தத்தம் [illegible]லைக்கும் குடிமைக்கும் - ஒவ்வொருவரும் தமது தமது நிலைக்கு குடியினியல்புக்கும்—தப்பாமே ஒத்த கடப்பாட்டில் தாள் ஊன்றி - ஏறுதல்குறைதலின்றி ஒப்பதான கடப்பாட்டின் கண்ணே அசைவின்றி நின்று—எய்த்தும் அறங்கடையிற் செல்லார் பிறன் பொருளும் வெஃகார் - விதிவசத்தால் அந்நிலை தளர்ந்தபோதும் பாவவழியிற் செல்லாராய்ப் பிறன்பொருளையும் விரும்பாதவருமாய் முயல்வாராயின—பொருள் புறங்கடையதாகும் - பொருளானது அவருடைய தலைவாயிலிலே தானேவந்து சேருமியல்புடையதாகும். எ-று.

தமது நிலைமைக்குங் குடிமைக்கும் இயையத் தவிராது செயற்பாலனவற்றைச் சலியாது செய்து நல்வழியினின்று முயல்வார்க்குச் செல்வங் குறையாதென்பது கருத்து.

நிலையாவது தம்மிடத்தே நிற்றலுடையனவாகிய பொருள் வலி ஆண்மை துணை முதலியன. குடிமையாவது தமது குடியிலுள்ளாரால் ஆசரிக்கப்பட்டு வந்த இயல்புகள். கடப்பாடாவது தவிராது செயற்பாலனவாகிய கடமையாயுள்ளது. பரிமேலழகர் கடப்பாடு-ஒப்புரவு என்றும் ஒப்புரவாவது உலகநடையினை அறிந்துசெய்தல் என்றும் கூறுவர். வேறுசிலர் உலகியல் என்றும் முறைமையென்றும் கூறுவர். நிலைக்கொத்த கடப்பாடாவது தம்பாலுள்ள பொருள் ஆண்மை முதலிய நிலைக்கேற்பச் செயற்பாலனவற்றைச் செய்தல். குடிமைக்கொத்த கடப்பாடாவது தமதுமுன்னோர் நடந்த வரம்பிறவாது செயற்பாலனவற்றைச் செய்தல். தப்புதல் நிலைக்குங் குடிமைக்குமுரிய அளவினின்று பெருக்கமும் சுருக்கமுமாதல். (சுச)

## உத்தமர்செல்வம்.

பொதுமகளே போல்வ தலையாயார் செல்வம்
குலமகளே யேனையோர் செல்வம்—கலனழிந்த
கைமையார் பெண்மை நலம்போற் கடையாயார்
செல்வம பயன்படுவ தில்.

(இ-ள்.) தலையாயார் செல்வம் பொதுமகள் நலம் போல்வ - உத்தமரிடத்துள்ள செல்வம் பொதுமகளிடத்துள்ள அழகினைப்போலப் பலர்க்கும பயன்படுதலுடையதாகும்— ஏனையோர் செல்வம் குலமகள் நலம் போல்வ - மத்திமரிடத்துள்ள செல்வம் கற்புடையாளிடத்துள்ள அழகினைப்போலத் தன்னாயகற்கன்றிப் பிறாக்குப் பயன்படுதலிலதாகும—கடையாயார் செல்வம கலன் அழிந்த கைமை பெண்மை ஆர் நலமபோல் பயன்படுவது இல் - அதமரிடத்துள்ள செல்வம மங்கலநாணிழந்த அமங்கலியின் பெண்டன்மை நிறைந்த அழகினைப் போல ஒருவர்க்கும் பயன்படுவதில்லை. எ-று.

தாமும் அனுபவித்துப் பிறர்க்குங் கொடுத்தலால் உத்தமரிடத்துள்ள செல்வமே சிறந்ததென்பது கருத்து.

மத்திமர் செல்வம் அவர்க்குமாத்திரமன்றிப் பிறர்க்குப் பயன்படாதென்பதும், அதமருடையசெல்வம் அவர்க்குத்தானும் பயன்படாதென்பதும் உபமானமுகத்தாற் பெறப்படும். (சுரு)

## கோடையிலான்செல்வம்.

வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல—கொன்னே
அருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப் படான்.

(இ-ள்.) வள்ளன்மை இல்லாதான் செல்வத்தின் - உலோபியுடைய செல்வத்தினும் - மற்றையோன் நல்குரவே நனி நல்ல - கொ

டையாளியுடைய வறுமையே மிகச்சிறந்ததாகும்—(ஏனெனில்;) அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று - இவன் அருளில்லாதவன் என்றும், அன்பில்லாதவனென்றும், கண்ணோட்டமில்லாதவனென்றும் பலவாறு சொல்லி—பலரால் கொன்னே இகழப்படான் - பலராலும் வீணாக இகழப்படமாட்டான். எ-று.

செல்வனாயிருந்துங் கொடுக்குங் குணமில்லாதவனை யாவருமிகழ்வரென்பது கருத்து.

வள்ளன்மை - கொடுக்குங் குணமுடைமை. போலும் - அசை. தான் பிறரை இகழானாகவும் பிறராலிகழப்படுதல்பற்றி கொன்னேயென்றார். கொடையில்லாதவன் அருளில னன்பிலன் கண்ணறையனென்று இகழப்படுவான் என்பதை உட்கொண்டு அது புலப்படுமாறு கொடையாளி அங்ஙனமிகழப்படானெனக் கூறுதலால் இது மாறுபடுபுகழ்நிலை என்னுமணி. (௬௬)

### இன்சொற்கூறுதல்.

ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல
ஓகோ கொடிது கொடிதம்மா—நாகொன்று
தீவினைக் கம்மியனால் வாய்பூட் டிடப்படின்மற்
றாவா விவரென்செய் வார்.

(இ-ள்.) ஈகை அரிதெனினும் - ஈயப்படும்பொருள் அரியதாய் இல்லையென்று சொல்லப்படுவதாயினும்—இன் சொலினும் நல்கூர்தல்- எளிதிற் செய்யத்தக்கதாய் ஈதலினும் மகிழ்வையுண்டாக்கவல்ல இன் சொற்கண்ணுமின்மையடைதல்—ஓகோ கொடிது கொடிது - ஓகோ கொடுமை! கொடுமை!—நா கொன்று தீவினை கம்மியனால் வாய் பூட்டிடப்படின் - சொல்லமுடியாமல் நாக்கினை உள்ளே அடக்கித் தீவினையாகிய கம்மியனால் வாயாகிய கதவு அடைக்கப்படுமாயின்—இவர் - கொடாதவழி இன்சொல்லையாவது சொல்லி மகிழ்விக்கவறியாதவர்—ஆவா என்செய்வார் - ஐயையோ! யாதுதான் செய்வார். எ-று.

கொடுத்தல் கூடாதவழி அதனினும் நல்லதாய்த் தம்வயத்ததாய் வெளியே விடினுங் குறைவுபடாததாயுள்ள இன்சொல்லைக் கூறாதுவிடுதல் மிக்ககொடுமை என்பது கருத்து.

ஓகோ முதலியன அதிசயவிரக்கங்காட்டவந்தன. அருக்கி வைத்திருந்த இன்சொற்கொண்டு தமக்குவேண்டுஞ் சுகங்களையுஞ் சொல்லிச் செய்வித்துக்கொள்ள மாட்டாரென்பது தோன்ற என்செய்வாரெனறார். மற்று - அசை. (௬௭)

### வாக்கினாற்செயுநன்மை.

சொல்வன்மை யுண்டெனிற் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல—வல்லைத்தம்
ஆக்கங் கெடுவ துளதெனினு மஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர்.

(இ-ள்.) சொல் வன்மை உண்டெனின் - ஒருவருக்குத் தமது சொல்லின்கண் பிறர்கேட்டமைந்து நடக்கத்தக்க கௌரவம் உளதாயின் — கொன்னே விடுத்தொழிதல் - அவ்வாறாய சொற்கொண்டு செய்வன தவிர்வனவற்றைச்சொல்லிச் செய்வித்து நற்பயன்பெறாமல் அச்சொற் பயனிலதாகப் போகவிட்டுவிடுதல்—நல்வினை கோறலின் வேறு அல்ல - புண்ணியச்செயல்களுக்குக் கேடுசெய்தலினின்றும் வேறான செயலன்று—வாக்கின் பயன் கொள்பவர் - வாக்கினுமேல செய்யத்தக்க நல்வினைகளைச் செய்து அவற்றாற் பெறும்பயனுமுண்டென்பதனைக்கொள்பவர்—தம் ஆக்கம் வல்லே கெடுவது உளதெனினும் - தமது சொற்கொண்டு நிகழுஞ் செயல்களுள்ளே தமது செல்வம் விரைந்து கெடுதற்குக் காரணமாக வருஞ் செயலுளதாயினும்— அஞ்சுபவோ - அதனையஞ்சிப் பின்னிடுவாரோ பின்னிடமாட்டார். எ-று.

வாக்குநன்மையாற் பெறும்பயனையறிந்தவர் வாக்கினாற் செயப்படுவனவாகிய நன்மைகளைத் தவறாது விரைந்து செய்வரென்பது கருத்து.

அதிகாரம், செல்வம், கல்வி, அறிவு குலம் முதலியபற்றியல்லது வன்மையடைதல் சொல்லுக்கியல்பாகவில்லாமைபற்றி உண்டெனினென்றார். சொல்லாற்செயப்படுந் தருமத்தினைச்செய்ய வன்மையிருந்துஞ் செய்யாதுவிடுதல் நல்வினையைக்கெடுத்தலால் வரும் பாவத்தினை அடைவிக்கும் என்பது தோன்ற நல்வினைகோறலின் வேறல்லவென்றார். வாக்கினாற் செயப்படும் புண்ணியங்களாவன: "அறம்பெரிதுரைத்தல் புறங்கூறாமை, வாய்மை கல்வி தீமையிற்றிறம்பல், இன்மொழியிசைத்தல், வன்மொழிமறுத்தல்" என ஞானாமிர்தங் கூறுவனவும் பிறவுமாம். நற்பயன் புண்ணியம், புகழ் முதலியன. (௬அ)

சிறியமுயற்சியும்பெரியபயனும்.

சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்
பெறுமெனிற் றாழ்வரோ தாழார்—அறனல்ல
எண்மைய வாயினுங் கைவிட் டரிதெனினும்
ஒண்மையிற் றீர்ந்தொழுக லார்.

(இ-ள்.) எண்மையவாயினும் அறனல்ல கைவிட்டு - எளிதாகச் செய்து பெரும்பயன் பெறத்தக்கனவாய் வாய்க்குமாயினும் பாவத்தொடர்புடைய காரியங்களை முற்றும் விடுத்தொழிந்து—அரிதெனினும் ஒண்மையின் தீர்ந்து ஒழுகலார் - செயதற்கரியதாயினும் நன்மையோடு சம்பந்தமுடைய காரியத்தை நன்மையினின்றும் விலகியொழுகாது செய்து பயன்கொள்ளுஞ் சாதுரியர்கள்—சிறு முயற்சி செய்து உறுபயன் கொள்ளப் பெறுமெனின் - அற்பகாரியஞ் செய்தலால் மிக்கபயன் கொள்ளப்பெறுமாயின்—தாழ்வரோ தாழார் - அதனைச்செய்தற்குத் தாமதஞ்செய்வாரா ஒருகணமேனுந் தாமதமாய் நில்லாது விரைந்து செய்வார். எ-று.

அருஞ்செயல்களையுஞ் செய்து நன்மைபெறுஞ் சாதுரியர்கள் பெருநன்மை வருதற்குரிய அற்பகாரியத்தை மிக விரைந்துசெய்வாரென்பது கருத்து.

சிறுமுயற்சி - முற்கவியிற்சொல்லப்பட்ட வாக்குவன்மையாற் செய்யத்தக்க நன்மைபோன்ற அற்பகாரியம். முயற்சி - முயலப்படுவதென்னும் பொருட்டாய் இங்கே காரியத்திற்காயிற்று. ஒண்மை - நன்மை. "அழகுநன்றுமறிவு மொண்மை" என்பது பிங்கலம். வாயினென்பது முதனிலைத்தொழிற்பெயரடியாகவந்த வினையெச்சம். வாய்த்தல் - நேர்படுதல். (கூகூ)

### நாகரிகமில்லாதவர்.

செயக்கடவ வல்லனவுஞ் செய்துமனென்பார்
நயத்தகு நாகரிக மென்னுஞ்—செயிர்த்துரைப்பின்
நெஞ்சுநோ மென்று தலைதுமிப்பான் றண்ணளிபோல்
எஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று.

(இ-ள்.) செயக்கடவவல்லனவும் செய்தும் மன் என்பார் - (மேலே சொல்லப்பட்டனவாகிய எளிதிற்செய்து நலம்பெறற்குரிய காரியங்களைச் செய்யாது) தம்மாலே செய்து முடிக்கவியலாத காரியங்களையும் பெரிதுஞ் செய்வோமென்பவருடைய—நயத்தகும் நாகரிகம் என்னும் - விரும்பத்தக்க சாதுரியம என்ன பயனுடையதாகும்!—செயிர்த்து உரைப்பின் நெஞ்சு நோம் என்று - ஒருவரைக் கோபித்துக் கடிந்து கூறுவேனாயின்; அவர்மனம் வருந்துமென்று கூறுதுவிடுத்து—தலைதுமிப்பான் தண்ணளிபோல் எஞ்சாது எடுத்துரைக்கற்பாற்று - பின்னர் அவருடைய தலையை வெட்டத் துணிபவனுடைய தண்ணிய கிருபை எடுத்திகழ்ந்து சொல்லப்படுதல்போல அவருடைய நாகரிகமும் பூரணமாக எடுத்திகழ்ந்து சொல்லப்படுந் தன்மையையுடையதாகும். எ-று.

இலகுவாகச் செய்து நலம்பெறுதற்குரிய காரியத்தைவிட்டு செய்துமுடிக்க இயலாத காரியத்தைச் செய்வோமென்று துணிபவருடைய சாமர்த்தியம் இகழப்படுமென்பது கருத்து

நாகரிகம் - நாகரிகர்செயல். நாகரிகர் - நகரசம்பந்தமுடையவர். நகரமாவது புண்ணியமானசெயலிலே வல்லவரைத் தன்மாட்டுடையது. எனவே நாகரிகம் - செயற்பாலனவாகிய நற்செயலைச்செய்யும் வன்மையென்பது பெறப்படும். நாகரிகமென்பதற்குத் தாட்சிண்ணியமென்பாருமுளர். (எ0)

### அடக்கமிலாதவர்.

அல்லன செய்யினு மாகுலங் கூழாக்கொண்
டொல்காதார் வாய்விட் டுலம்புப—அல்லால்
பிறர்பிறர் செய்பபோற் செயத்தக்க செய்தாங்
கறிமடம் பூண்டிருப்பா ரா.

(இ-ள்.) ஒல்காதார் - அமைவில்லாதவர்—அல்லன செய்யினும் ஆகுலம் கூழாக்கொண்டு வாய்விட்டு உலம்புப அல்லால் - செய்யத்தக்கனவல்லாத அருஞ்செயல்களையும் ஒரோவழிச் செய்தாராயினும் ஆரவாரத்தையே பயனாகக்கொண்டு வாய்திறந்து உளறுவார்களல்லாமல்—பிறர்பிறர் செய்பபோல் செயத்தக்க செய்து - அமையுமியல்

புடைய பிறரெல்லாஞ் செய்வதுபோலச் செய்யத்தக்கவைகளைச் செய்து—ஆங்கு அறிமடம் பூண்டு நிற்பாரா - அச்செயலகளிலே அறிமடம்பூண்டு நிற்கமாட்டார். எ-று.

அமைவில்லாதவர் செயற்கரியதொன்று செய்தாராயின்; அதனை யாவர்க்கு மெடுத்துசசொல்லித் தொனிசெய்வரென்பது கருத்து.

ஆகுலமாவது பலராலுமறியப்பட்டுப் பேசுதல். ஆரவாரித்தன் மாத்திரமாகிய பயனுடைமையின் ஆகுலமென்றார். அறியும்படி இரைந்து பலமுறை கூறுதல்பற்றி வாய்விட்டுலம்புப என்றார். அறிமடம் - அறிந்தும் அறியார்போன்றிருத்தல். இங்கே அறிமடம்பூணலாவது: தான்செய்த அருஞ்செயலை ஒருவாற்றானுந் தனனுற் பிறர்க்கு வெளிப்படுத்தாமலிருத்தல். பிறர் பிறர் செய்பபோல் என்பதற்குத தாம்செய்வதுவாக வெளிப்படாமற் பிறர்செய்வதுபோலாக என்றுரைப்பாருமுளர். (எக)

பழிகூறுவோன்.

பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனுக் கொள்வான்—பயமின்று
மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக் கொல்வான்
கைவிதிர்த் தஞ்சப் படும். [போற்

(இ-ள்.) பகையின்று பல்லார் பழியெடுத்து ஓதி - யாதொரு பகையுமில்லாமற் பலரிடத்துமுள்ள வசைகளை எடுத்துப்பேசி—நகை ஒன்றே நன்பயனு கொள்வான் - இகழ்தலாகிய தீமையொன்றினையே நற்பயனென்று கொள்பவன்—பயமின்று மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறு உடைத்து கொல்வான்போல் - வேறொருபயனுமின்றிச் சரீரத்திலே நடுக்கமாகிய பயனொன்றைக் காணக்கருதி பிறனொருவனுடைய கதுப்பினையடித்துடைத்து வருத்துபவன் பிறராற்கண்டுழி அஞ்சப்படுதல்போல — கைவிதிர்த்து அஞ்சப்படும் - கைதெறித்து அஞ்சப்படுவான். எ-று.

காரணமின்றிப் பிறர்வசை பேசுவோனைக் கண்டமாத்திரத்திற்றானே யாவரும் பேசாமலஞ்சி ஓடுவரென்பது கருத்து.

இன்றியென்பன இன்றெனத் திரிந்தன. கைவிதிர்ப்பு - கைந்நொடித்தல். இங்கே இவனோடு நின்று பேசுதலாகாதென்பதைக் குறிப்பா லுணர்த்திற்று. கொல்வான் எழுவாய். அஞ்சப்படும் பயனிலை. அவனஞ்சப்படுதலாவது தன்னைக்கண்டுழிப் பிறரெல்லாம் பேசாமலஞ்சியோடுதற்குக் காரணனாதல். (எஉ)

ஆத்திகருநாத்திகரும்.

தெய்வ முளதென்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்ணின்று நின்றெறுக்குந்—தெய்வம்
இலதென்பார்க் கில்லைத்தம் மின்புதல்வர்க் கன்றே
பலகா லுஞ் சொல்வர் பயன்.

(இ-ள்.) தெய்வம் உளது என்பார் - தெய்வமுண்டென்றுகருதி விசுவசிப்பவர்கள்—தீய செயப் புகின் - தீயசெயல்களைச் செய்யத்

தொடங்குவாராயின்—தெய்வமோ கண் நின்று நின்று ஒறுக்கும் - தெய்வந்தானே அவரெதிரில் ஆங்காங்கு நின்று அத்தீயசெயல்களிற் செல்லவிடாமல் அவரைக்கண்டிக்கும்—தெய்வம் இல்லை என்பார்க்கு இல்லை - தெய்வமென்பது இல்பொருளென்றுசொல்லி விசுவசியாதவருக்குத் தெய்வம் முன்னாகின்று தீயவழியைவிலக்கி நல்வழியில் விடுதலில்லை—(அதற்குத் திருட்டாந்தம்) தம் இளம் புதல்வர்க்கு அன்றே பயன் பல்காலும் சொல்வர் - பிதாமார் தம்முடைய இளைய புத்திரர்களுக்கல்லவா தீயவழியிற்செல்லாமற் பயனுடைய கட்டுரைகளைப் பலமுறையுஞ் சொல்வார். எ-று.

தெய்வமுண்டென்று விசுவசிப்போர் ஓரோவழித் தீங்குசெய்யப்புகினுந் தெய்வம் விடாதென்பது கருத்து.

தெய்வமுளதென்பவர் தீயனசெய்யாரென்பதுதோன்றச் செய்யப்புகின் எனவும் இவ்வென்பதற்கு முன்வாராமைதோன்றக் கண்ணின்று எனவுங் கூறினார். கண்ணின்றென்பதற்குத் தாட்சிண்ணியமின்றியென் றுரைப்பாருமுளர். அது, சொற்குணமின்மையானும், திருட்டாந்தத்துள்ள பல்காலும் என்பதற்கு மாறுபடுதலானும் பொருந்தாதெனக். (௭௩)

### தீவினையாளர்செல்வம்.

தீய செயற்செய்வா ராக்கம் பெருகினுந்
தீயன தீயனவே வேறல்ல— தீயன
நல்லன வாகா நாவின் புறநக்கக்
கொல்லுங் கவயமா போல.

(இ-ள்) தீயசெயல் செய்வார் ஆக்கம் பெருகினும் தீயனவாகிய செயல்களைச் செய்பவருடைய செல்வமானது பெருகிச் சிறிதின்பங்கொடுப்பினும்—தீயன தீயனவே வேறு அல்ல - நெருப்பினகணுள்ளதாகிய தீமையையுடையனவேயாம்; அதனின் வேறுதலுளதேனுஞ் சேர்ந்தாரைக்கொல்லுதலால் வேறுவனவல்ல—தீயன நல்லனவாகா - தீச்சம்பந்தமுடையன நன்மைப்பயனவாகா—கவயமா நாவின்புறம் நக்கிக் கொல்லும் - காட்டுப்பசுவானது முன்னர் நாக்கினாலே இன்புறுமாறு நக்கிப் பின்னர்த் துன்பமுறுமாறு கொன்றுவிடும். எ-று.

தீயவழியால் வந்த செல்வம் சிறிதுவளருமாயினும் மிகப் பெருந்துன்பஞ் செய்வதாகும் என்பது கருத்து.

தீ தான்பற்றிய இடத்தை முற்றத் தகித்தல்போலத் தீமையாலே தேடப்பட்டபொருளுந் தன்னைச்சேர்ந்தாரை முற்ற அழித்தலபற்றித் தீயனதீயன என்றார். போல-அசை. (௭௪)

### பழிநாணுவோர்.

நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயுஞ்
செந்நெறிச் செல்வார்ப் பீழல்லா—முன்னைத்தம

ஊழ்வலி யுன்னிப் பழிநாணி யுள்ளுடையார்
தீய செயினுஞ் சில.

(இ-ள்.) சில தீய செயினும் - அபுத்திபூர்வகத்தாலாவது பிறகாரணத்தாலாவது தாம் ஒரோவழிச் சில தீயசெயல்களைச் செய்தாராயினும்—தம் முன்னை ஊழ்வலி உன்னி பழிநாணி உள்ளுடைவார் - தம்முடைய பழைய ஊழின்வலியை நினைத்துப் பழிக்கு நாணி என் செய்தேமென்று மனநிலைகுலைபவர்கள்—நன்மக்கள் செம் நா தழும்பு இருக்க - பெரியோருடைய செம்மையாகிய நாக்கிலே (அடிக்கடி தமது நன்மையை எடுத்துரைத்தலால்) தழும்பேறியிருக்கும்படி—நாள் வாயும் செம் நெறி செல்வாரின் கீழல்லர் - நாடோறும் வாய்க்கின்ற நல்வழியிலே ஒழுகுவாரினின்றுஞ் சிறியவராகார். எ-று.

அறிஞராயுள்ளோர் அபுத்திபூர்வமாகச் சில தீங்கு செய்யினும் அதனால் அவமதிக்கப்படாரென்பது கருத்து.

சத்தியமாகிய செம்மையுடைமையாற் பெரியோர் நா செந்நாவெனப்பட்டது. ஊழ்வலியுன்னலாவது ஊழினது வலியாலே செயப்பட்டதென்று கருதுதல். (௭௫)

---

பிறன்மனைவியை விரும்புதல்.

பிறன்வரை நின்றாள் கடைத்தலை சேறல்
அறனன்றே யாயினு மாக—சிறுவரையும்
நன்னலத்த தாயினுங் கொள்க நலமன்றே
மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய்.

(இ-ள்.) பிறன் வரை நின்றாள் கடைத்தலை சேறல் - பிறனுடைய எல்லைக்குள்ளே நின்றவளுடைய வாயிலின்கண்ணே சென்று நிற்றல்—அறனன்றே ஆயினும் ஆக - பாவமேயாயினுமாக— சிறுவரை நல் நலத்தது ஆயினும் கொள்க—அங்கே பெறுவது ஒருகணப்பொழுதாவது அநுபவிக்கத்தக்க நற்சுகமுடையதாயின் அதனைக் கொள்ளுக—நலம் அன்றே - நலந்தருவதன்று—மெய் நடுங்க உள் நடுங்கும் நோய் - சரீரம் நடுங்க மனமும் நடுங்குதற்குக் காரணமான வருத்தந்தருவதேயாம். எ-று

பிறன்மனையாளைப் புணர்தல் பாவமாய்ப் பின்னர்த் துன்பப்பயத்தலன்றி அப்பொழுதும் பெறக்கருதிய இன்பத்திற்கு மாறாய்த் துன்பம்பயத்தலாற் சிறிது மாகாதெனபது கருத்து.

பிறன்மனையாளைப் புணர்தலென்பது இழிவுபற்றி பிறன்வரைநின்றாள் கடைத்தலைசேறல் என வேறோராற்றாற் கூறப்பட்டது. அது நோயாதலைப் 'புக்கவிடத்தச்சம் போதரும்போதச்சம துய்க்குமிடத்தச்சம் தோன்றாமற்காப்பச்சம்'' ''காணிற்குடிப்பழியாங் கையுறிற் கால்குறையும்'' என்னும் நாலடிக் கவிகளானுணர்க. (௭௬)

## நல்லின்பம்.

கருமஞ் சிதையாமே கல்வி கெடாமே
தருமமுந் தாழ்வு படாமே—பெரிதுந்தம
மின்னலமுங் குன்றாமே யேரிளங் கொம்பன்னார்
நன்னலந் துய்த்த னலம்.

(இ-ள்.) கருமம் சிதையாமே - தம்மாற் செயற்பாலனவாகிய காரியமுந் தவறிப்போகாமல்—கல்வி கெடாமே - கற்றுக்கொண்ட கல்வியுங் கேடுறாமல்—தருமமும் தாழ்வு படாமே - செய்துவருந் தருமமும் தாழ்ச்சியடையாமல்—தம் இன்னலமுங் குன்றாமே - தம்முடைய இல்லறநன்மையுங் குறைவுபடாமல்—ஏர் இளங் கொம்பு அன்னார் நல் நலம் துய்த்தல் நலம் - அழகிய இளங்கொம்பினை ஒத்த தம் மனைவியாற் கொடுக்கப்படும் நல்லின்பத்தை அநுபவித்தல் ஒருவருக்கு நன்மையாகும். எ-று.

கருமம் முதலியன தவறாது தம்மனைவியோடு கூடியின்பமனுபவித்தலே நன்மையென்பது கருத்து.

கருமம் முதலியன சிதையுமாயின்; அவ்வின்பமுஞ் சிதைந்து துன்பமாய் முடியும். பகை பாவம் அச்சம் பழி என்பனவின்மைபற்றி நன்னலமென்றார். ()

## காமசிந்தையுடையவர்.

கொலையஞ்சார் பொய்நாணார் மானமு மோம்பார்
களவொன்றோ வேனையவுஞ் செய்வார்—பழியோடு
பாவ மிஃதென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார்.

(இ-ள்.) காமம் கதுவப் பட்டார் - காமத்தினாலே இறுகப் பற்றப் பட்டவர்—கொலை அஞ்சார் - கொலைசெய்தற்கும் அஞ்சமாட்டார்—பொய் நாணார் - பொய்சொல்லுதற்கும் நாணமாட்டார்—மானமும் ஓம்பார் - தம்முடைய மானத்தையும் பேணார்—களவு ஒன்றோ ஏனையவும் செய்வார் - களவுமாத்திரமோ மற்றைய பாதகச்செயல்களையுஞ் செய்வார்—இஃது பழியொடு பாவம் என்னார் - இது பழிபாவங்களைப் பயப்பதொன்றென்பதையும் கருதார்!—பிறிது மற்று என் செய்யார் - இவற்றின் வேறாயுள்ள எத்தீங்குகளைத்தான் செய்யமாட்டார். எ-று.

காமசிந்தையுடையவர் எல்லாத்தீங்குகளுஞ் செய்வரென்பது கருத்து. ()

## தூர்த்தர்.

திருவினு நல்லாண் மனைக்கிழத்தி யேனும்
பிறர்மனைக்கே பீடழிந்து நிற்பர்—நறுவிய
வாயின வேனு முமிழ்ந்து கடித்தின்னுந்
தீய விலங்கிற் சிலர்.

(இ-ள்.) சிலர் மனைக்கிழத்தி திருவினும் நல்லாளேனும் - சிலர் தம்மனையாட்டி இலக்குமியினுஞ் சிறந்தவளாயினும் அவளைவிட்டு— பிறர் மனைக்கே பீடு அழிந்து - பிறன்மனையாளை விரும்பித் தம்முடைய மானமழிந்து—நறுவிய வாயினவேனும் உமிழ்ந்து கடுதின்னும் தீய விலங்கின் நிற்பர் - இனிய பொருள்கள் வாயின்கண்ணகப்பட்டனவாயினும் அவற்றைக் கக்கிவிட்டுக் கார்ப்புள்ள பொருள்தேடித் தின்கின்ற தீய மிருகம்போல அறிவில்லாதவராய் நிற்பார். எ-று.

மனைவியைவிட்டுப் பிறர்மனையாளை விரும்பிச் செல்வோர் கரும்பினைவிட்டு வேம்பினை விரும்புவார்போன்ற பெருமூடரென்பது கருத்து.

ஒட்டகம் இனிய பதார்த்தங்களைவிட்டு வேம்புமுதலிய கசப்புள்ள பொருள்களைத் தேடி உண்ணுமென்பர். "தள்ளரும்பரந்தாங்கியவொட்டகம், தெள்ளுதண்கரும்பியாவையுந்தின்கில, உள்ளமென்னத்தம்வாயுமுலர்ந்தன, கள்ளுநன்பார்களிற்கைப்பனதேடியே" என்பது இராமாயணம். (௭௯)

வாழ்க்கைத்துணைநலம்.

கற்புடுத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு—மக்கட்பே
றென்பதோர் செல்வமு முண்டாயி னில்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு.

(இ-ள்.) கற்பு உடுத்து - கற்பினையே உடையாக உடுத்து— அன்பு முடித்து - அன்பினையே மலராகச் சூடி—நாண் மெய் பூசி - நாணினையே கலவைச்சாந்தாகச் சரீரத்திற் பூசி—நற்குணம் நற்செய்கை பூண்டாட்கு - நற்குண நற்செய்கைகளையே ஆபரணங்களாக அணிந்துகொண்ட மனையாட்டிக்கு—மக்கட்பேறு என்பதோர் செல்வமும் உண்டாயின் - நன்மக்களைப் பெறுதலென்று சொல்லப்படுஞ் செல்வமுமுளதாயின்—கொண்டாற்கு செய்தவம் வேறு இல்லன்றே - நாயகனுக்குச் செய்யப்படுந் தவம் வேறில்லையேயாம். எ-று.

கற்பு அன்பு நாண் முதலியவைகளை யுறுதியாகக்கொண்ட நாயகியாலே நாயகனுக்கு எல்லாத்தவமுமமையுமென்பது கருத்து. "இல்லதெனில்லவண் மாண்பானால்" என்பது வள்ளுவர்.

கற்பாவது கணவனே தெய்வமெனக்கருதியிருப்பதோர் கொள்கை. நாணாவது செய்யத்தகாதனவற்றிலே உளத்திற்குவருவதோர் ஒடுக்கம். (௮௰)

மகளிர்மனம்.

ஏந்தெழின் மிக்கா னிளையா னிசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான்—வாய்ந்த
நயனுடை யின்சொல்லான் கேளெனினு மாதர்க்
கயலார்மே லாகு மனம்.

(இ-ள்.) ஏந்து எழில் மிக்கான் - எவராலுங் கொள்ளப்படும் அழகிற்சிறந்தவனும்— இளையான் - இளம்பருவமுடையவனுமாய் —

இசைவல்லான் - இசைபாடுதலில் வன்மையுடையவனுமாய்—காந்தையர் கண்கவர் நோக்கத்தான் - பெண்களுடைய கண்களையெல்லாங் கவரும் பார்வையுடையவனுமாய்—வாய்ந்த நயனுடை இன்சொல்லனை கேள்வனினும் - சிறந்த நீதியையுடைய இன்சொற்களைப் பேசுபவனுமாய் வாய்ந்த ஓராடவன் தமக்கு நாயகனாகவுள்ளனென்றாலும்—மாதர்க்கு மநம் அயலார் மேலாகும் - பெண்களுக்கு மநம் அவனைவிட்டு அயலவர்மேற் செல்லும். எ-று.

நாயகன் ஐம்பொறிகளானும் அநுபவிக்கத்தக்க சுகாநுபவங்களெல்லாமுடையனாயினும் அவனைவிட்டு அயலாரைவிரும்புதல் பெண்களுக்கு இயற்கையென்பது கருத்து.

பெண்களுக்குக் கற்பும் மநமும் நண்பும் நிலைகுலைதல் இயற்கை என்பது மநுஸ்மிருதி. இசைபாடுதலும் பெண்களை மயக்கி வசமாக்கும்; "பாடினான்றேவகீதம பண்ணினுக்காசானபாடச் சூடகமகளிர்சோர்ந்து" என்பது சிந்தாமணி. ()

கற்பில்லாமனைவி.

கற்பின் மகளி னலம்விற் றுணவுகொளும்
பொற்றொடி நல்லார் நனிநல்லர்—மற்றுத்தம்
கேள்வர்க்கு மேதிலர்க்குந் தங்கட்குந் தங்கிளைஞ
யாவர்க்குங் கேடுசூ ழார்.

(இ-ள்.) நலம் விற்று உணவுகொள்ளும் பொற்றொடி நல்லார் - தம்முடைய இன்பம்விற்றுச் சீவநஞ்செய்யும் பரத்தையர்கள்—கற்பு இல் மகளின் நனி நல்லார் - கற்பில்லாத மனையாட்டியினும் மிக நல்லவராவர்—(ஏனெனில்) தம் கேள்வர்க்கும் ஏதிலர்க்கும் தங்கட்கும் தங்கிளைஞர் யாவர்க்கும் கேடு சூழார் - தம்மேலன்புடைய நாயகருக்கும், பிறருக்கும், தமக்கும், தமதுறவினர் சகலருக்குங் கேடு செய்ய நினையார். எ-று.

கற்பில்லா மனைவியினும் பொதுமகளிர் நல்லவரென்பது கருத்து.

பொற்றொடி - பொன்னாலாகிய வளையல். கேள்வர்க்குக் கேடுசூழ்தலாவது அபசாரியாய் அவர் புகழையும் புண்ணியத்தையுங் கெடுத்தல். ஏதிலர்க்குக் கேடுசூழ்தலாவது அவரையும் புணர்ந்து பகை பாவம் பழி என்பனவுடையராக்குதல். கிளைஞர்க்குக் கேடுசூழ்தலாவது அவரையும் பழிமுதலியவைகட்காளாக்குதல். "பொருவில்கற்பின்வழீஇயமங்கையர்-உரியமூன்று மரபிலுள்ளோரையும்-வெருவத்தேங்கிவிழுங்கியுமிழ்கலா-வெரியுந்நிரயத்திற்குடியேற்றுவார்" என்பது காசிகாண்டம். (அஉ)

கற்பிலாமகளிர்பிறப்பு.

முறையுங் குடிமையும் பான்மையு நோக்கார்
நிறையு கெடுநாணும் பேணார்—பிறிதுமொரு
பெற்றிமை பேதைமைக் குண்டே பெரும்பாவம்
கற்பின் மகளிர் பிறப்பு.

(இ-ள்.) முறையும் குடிமையும் பான்மையும் நோக்கார் - முறைமையையும் தங்குடிப்பெருமையையும் பான்மையையுங் கருதார்—நிறையும் நெடுநாணும் பேணார் - நிறையினையும் மிக்க நாணினையும் பேணிக்கொள்ளார்—பிறிதும் ஒரு பெற்றிமையும் பேதைமைக்கு உண்டோ - இக்குணங்களன்றி வேறும ஒருகுணம் பேதைமையுடையாரிடத்துணடோ? இல்லை—கற்பு இல் மகளிர் பிறப்பு பெரும் பாவம் - (ஆதலாற்) கற்பில்லாத பெண்களின் பிறவி பெரும்பாவமுடையதாகும். எ-று.

கற்பிலாமகளிர் பெரும் பாவமுடையவரென்பது கருத்து.

முறைநோக்கலாவது இவர் நமக்கு இன்னமுறையினரெனக்கருதல். பான்மை ஒருவனுக்கேயுரிமையாய் நிற்றல். நிறையாவது கற்புநெறியிலே மனத்தினை நிறுத்தல். (௮௬)

## துறவிகள் பெண்களைவெறுத்தல்.

பெண்மை வியவார் பெயரு மெடுத்தோதார்
கண்ணொடு நெஞ்சுறைப்ப நோக்குறார்—பண்ணொடு
பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
வீடில் புலப்பகையி னார்.

(இ-ள்.) வீடு இல் புலப்பகையினர் - கெடுதலில்லாத புலன்களை வென்றவர்—பெண்மை வியவார் - பெண்களுக்குரிய தன்மைகளை நன்குமதியார்—பெயரும் எடுத்தோதார் - பெண்களென்னும் பெயரைத்தானும் எடுத்துச் சொல்லார்—கண்ணொடு நெஞ்சு உறைப்ப நோக்குறார் - கண்களோடு மனஞ் சென்றழுந்துமாறு பாரார்—பண்ணொடு பாடல் செவிமடார் - பண்ணோடு பாடலையுங் கேளார்—பண்பல்ல பாராட்டார் - பண்பல்லனவாய மற்றைக் குணஞ் செயல் முதலியவைகளையுங் கொண்டாடமாட்டார். எ-று.

ஐம்புலன்களுக்குமுரிய ஆசைகளை முற்ற விடுத்த முனிவர்கள் சிற்றின்பத்திற்குக் காரணமான விடயங்களிற் சிறிதுந் தொடர்ச்சியுறார் என்பது கருத்து.

பெண்மை என்றது பெண்களுடைய அழகு, குணம் முதலியவைகளை. செவிமடுத்தல்-கேட்டல். பண்பல்ல-நற்குணங்களல்லாதன. (௮௭)

## துறவிகளுண்டி.

துயிற்சுவையுந் தூநல்லார் தோட்சுவையு மெல்லாம்
அயிற்சுவையி னாகுவவென் றெண்ணி—அயிற்சுவையும்
பித்துணக் கொள்பபோற் கொள்ப பிறர்சிலர்போன்
மொத்துணா மொய்ம்பி னவர்.

(இ-ள்.) பிறர் சிலர் போல் மொத்துணா மொய்ம்பினவர் - வேறு சிலர்போல ஐம்பொறிக்குரிய அவாவினாலே அடிபடாத மனவலியுடைய தபோதனர்—துயிற்சுவையும் தூநல்லார் தோட்சுவையும் எல்லாம - நித்திரையாலாகுமின்பமும் குற்றமில்லாத பெண்களுடைய தோளைச்சேருதலாகிய இன்பமும மற்றைய எல்லாவின்பமும்—அயிற்

சுவையின் ஆது வ என்றெண்ணி - [illegible]
யன என்று கருதி—அயிற்சுவையும் [illegible]
கொள்ப - உண்டிவையாம் வைத்தியமுடையோன் [illegible]
யமினறி நோக்குறி அற்பமாக உண்பார். எ-று.

தபோதகர்கள் சிற்றின்ப விஷயத்திற்குக் காரணமாகுமென்று [illegible]
யுஞ் சுருக்குவார்களென்பது கருத்து.

அயிற்சுவை அயிலப்படுதலையுடைய சுவைப்பொருள். [illegible]
யென்றவாறும். பிறர்சிலரென்பது இலைமிக்கவிதைப்பவர்க்கே அறுத்தியிலுட்ப
வரை. (அ௩)

## துறவிகளுடம்புபேணுமை.

அன்போ டருளுடைய ரேனு முயிர்கிலோற்
றென்பியக்கங் கண்டும் புறந்தரார்—புன்புலாற்
பொய்க்குடி லோம்புவரோ போதத்தாற் றாம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார்.

(இ-ள்.) அன்போடு அருளுடையரேனும் - அன்பும் அருளு முடையராயினும்—உயிர்நிலை என்பு இயக்கம் கண்டும் புறந்தரார் - உடம்பிலே எலும்பு புறப்படுதலைக்கண்டும் அதனைக்காக்க நினையார்—போதத்தால் தாம் வேய்ந்த புக்கில் குடிபுகுதுவார் - ஞானங்கொண்டு தம்மால் வேயப்பட்ட மோட்சவீட்டிலே குடிபுகுதற்கு ஆயத்தமாக இருப்பவர்—புன்புலால் பொய்க்குடில் ஓம்புவரோ - இழிந்த தசைகளால் வேயப்பட்ட உடம்பாகிய பொய்க்குடிலைப் பேணுவாரோ பேண மாட்டார். எ-று.

பேரின்பவீடாகிய மோட்சத்திற் செல்லுதற்கிருப்போர் சிற்றின்பவீடாகிய உடம்பைப் பேணுர் என்பது கருத்து. (அசு)

## துறவிகள் சிற்றின்பம்விரும்பாமை.

சிற்றின்பஞ் சின்னீர தாயினு மஃதுற்றார்
மற்றின்பம் யாவையுங் கைவிடப—முற்றுந்தாம்
பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங்கும் பியில்.

(இ-ள்.) சிற்றின்பம் சில் நீரது ஆயினும் - சிற்றின்பம் சிறுமையுடையதாயினும்—அஃது உற்றார் மற்று இன்பம் யாவையும் கைவிடப - அதனுள்ளே முழுகினவர் மற்றையின்பங்களெல்லாவற்றையும் கைவிடுவார்—பேரின்பம் மா கடல் தாம் முற்றும் ஆடுவார் - பேரின்பமாகிய பெருங்கடலிலே தாம் முழுவதும் முழுகும் விருப்புடையவர்—பார் இன்பம் பாழ் கும்பியில் வீழ்பவோ - இவ்வுலகவின்பமாகிய அழுகற்சேற்றுநீரிலே விழுந்து முழுகார். எ-று.

பேரின்பத்தை விரும்புவோர் சிற்றின்பத்தை முற்றும் வெறுப்பரென்பது கருத்து.

கும்பி - சேறு. "யானையுநரகமுஞ்சேறுங்கும்பி" என்பது பிங்கலம். (அஎ)

**துறவிகளாலவசியம் விலக்கப்படுவது.**

எவ்வினைய ரேனு மிணைவிழைச்சொன் றில்லெனிற்
றெவ்வுந் திசைநோக்கிக் கைதொழூஉம்—அவ்வினை
காத்த லிலரே லெனைத்துணைய ராயினுந்
தூர்த்தருந் தூர்ப்பா ரலர்.

(இ-ள்.) எவ்வினையரேனும் இணைவிழைச்சு ஒன்று இல்லெனின் - துறவோர் தமது துறவுக்கு விலக்கப்பட்ட கோபித்தல், பிறரை நிந்தித்தல், ஓரிடத்திருத்தல், முதலிய செயலகளுள் எவைகளைத்தானுடையராயினும் மகளிர்புணர்ச்சியாகிய ஒருதொழிலையாத்திரம் செய்யாராயின்;—தெவ்வும் திசைநோக்கி கைதொழூஉம் - அவர் பகைவன்றானும் அவரிருக்குந் திசைநோக்கி அஞ்சலிசெய்வன்;—அவ்வினை காத்தல் இலரேல் - அச்செயல் தம்மிடம் நிகழாது காத்துக்கொள்ளாராயின்—எனைத்துணையராயினும் - விதிக்கப்பட்ட தொழில்களெல்லாஞ்செய்து எத்துணையுஞ் சிறந்தவராயிருப்பினும்—தூர்த்தரும் அலர் தூர்ப்பார் - மகளிர்புணர்ச்சியைச் சிறிதும் தவிராத காமுகர்தாமும அவர்மேற் பழிமொழிகளை அதிகமாகச் சொல்வார். எ-று.

எத்துணைச்சிறப்புடையராயினுங் காமப்பற்றுடையவர் துறவியென மதிக்கப்படாரென்பது கருத்து. "ஏந்திழையார் தஞ்சயரத் தெய்தித்தம் மெய்தொடினுங் காய்ந்து வர்த்தலே துறவுகாண்" என்றார் பிறரும்.

துறவிகளுக்கு விதிக்கப்பட்ட செயல்களாவன, கோபமின்மை, நிந்தையின்மை, பிச்சைவாங்குதல் முதலியன. இணைவிழைச்சு - புணர்ச்சி; பெண் ஆண் என்னும் இரண்டும் விரும்பிச் செய்யப்படுதலால் இணைவிழைச்செனப்பட்டது. (அஅ)

**பேதைமையுடையார்செயல்.**

பரபரப்பி னோடே பலபல செய்தாங்
கிரவுபகல் பாழுக் கிறைப்ப—ஒருவாற்றால்
நல்லாற்றி னூக்கிற் பதறிக் குலைகுலைப
எவ்வாற்றா னுய்வ ரிவர்.

(இ-ள்) பரபரப்பினோடே பலபல இரவுபகல் செய்து - (சிலர்) சம்பிரமத்தோடே மிகப்பல காரியங்களையெல்லாம் இரவும்பகலுமாகச் செய்து முடித்து—ஆங்கு பாழுக்கு இறைப்ப - அங்கே பெற்றுக்கொண்ட பொருள்களை ஒருபிரயோசநமுமில்லாத சிற்றின்பவிஷயங்களிலே அள்ளி வீசுவார்கள்—ஒரு ஆற்றான் நல்லாற்றின் நூக்கின் பதறி குலைகுலைப - அவர் ஒருவழியினாலே திருப்பி நல்வழியிலே செலுத்தப்படினும் அதனைவிட்டு யாம எங்கேவந்தோமென்று பதறி மனங்குலைவர்—இவர் எவ்வாற்றான் உய்வர் - இவ்வியல்புடையவர் எவ்வழியாலுய்திபெறுவார்: எ-று.

அரிதிற்பெற்ற செல்வங்களைச் சிற்றின்பவிஷயங்களிலே முற்றும் விடுபவர் ஒருகாலுமுய்யமாட்டாரென்பது கருத்து.

சம்பிரமம் - செய்ய விரும்பிய காரியத்திலே மனத்துக்குத் தோன்றும் விரைவு. அறிவின்மையாலே நல்வழியினிலேத்திலர். "வேறுகொள்புலனைவென்றோர் மேலோனன்னெறியுய்த்தாலுந் தேறியவுணர்விலாதோர் செல்வழிச்செல்வரன்றே" என்பது கந்தபுராணம். (ருகூ)

---

தவம்.

இளைய முதுதல மாற்றுது நோற்றென்
றுளைவின்று கண்பாடு மூமே—விளிவின்று
வாழநாள வரமபுடை மை காணபரேற் காணபாரும்
தாழாமே நோற்பா தவம்.

(இ-ள்.) வாழ் நாள் வரம்புடைமை விளிவு இன்று காணபரேல் - (ஒருவர் தாம்) வாழ்கின்ற நாள் இவ்வளவென எல்லையுடைத்தாயிருக்குந் தன்மையைக் கேடின்றி அறிவாராயின;—இளையம நோற்று முதுது தவம் ஆற்றுதும என்று - யாம் இப்போது இளமைப்பருவமுடையோம் வருத்துன்பங்களையெல்லாம் பொறுத்து முதுமைப்பருவத்திலேதானே தவஞ் செய்துகொள்ளுவேம என்று கருதி—உளைவு இன்று கண்பாடும ஊமே - தவஞ்செய்து வருந்தாது தூங்கிக்கிடத்தலும அவர்க்கு முறையேயாம்—காணபாரும தாழாமே தவம் நோற்பார - வாழ்நாள வரமபுடைமையைக் காணவல்ல முனிவாதாரும் தாம தமினறித் தவஞ்செய்வார. எ-று.

இறக்குநாளிதுவென அறியப்படாமையின் விரைந்து தவஞ்செய்யவேண்டும் எனபது கருதது. (கூ0)

துரிவிதி.

நல்லவை செய்யத் தொடங்கினு நோனுமே
அல்லன வல்லவற்றிற் கொணடேக்கும—எல்லி
வியனெறிச் செலவாரை யாறலைத் துண்பார
செலவு பிழைத்துய்ப்ப போல.

(இ-ள்.) எல்லி ஆறலைத்து உண்பார் - இராக்காலத்திலே வழிப்பறித்துண்பவர்களாகிய மறவாகள்—வியல் நெறி செல்வாரை செலவு பிழைத்து உய்பப போல் - சனப்போக்குவரவுடைய பெருவழியிற் செலபவரை அவ்வழியினின்றும விலகச்செய்து சனப்போக்குவரவில்லாத அருவழியிற் கொண்டுசெல்லுதல்போல—அல்லன - தீயூழானது—நோனுமே நல்லவை செய்ய தொடங்கினும் அல்லவற்றிற் கொண்டேக்கும் - ஒருவர் தவஞ்செய்யாது நற்செயல்களைச் செய்யத்தொடங்குவாராயினும் அவரைத் தீச்செயலகளிலே கொண்டுபோய் விடும. எ-று.

தவஞ்செய்யாதவர நல்வழிச்செல்லினும் ஊழ்வினை விடாதென்பது கருத்து.

செல்வு-வழி, மனம் போகியவழி போகாது [illegible] காரணமாகிய தவஞ் செய்யாதவர் பொறிவழியே மனத்தை விட்டவரை [illegible] தாம் செய்யத்தொடங்கிய நல்வழியையும் விடுத்து வழிவஞ்சத்தாராவர். (கூக)

கூடாவொழுக்க

நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக மன்று பிறிதொன்றே—கஞ்சுகம்
எப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்குமற்
றிப்புலமுங் காவா திது.

(இ-ள்.) நெஞ்சு புறம்பா துறந்தார் தவப்போர்வை - தம்முடையமனம் பற்று நீங்காது சேர்ந்தபடி சென்று துறவுக்குப் புறயபாகச் சொற்செயலகளாலே துறந்தவராகக் காணப்படுபவருடைய தவவேடமாகிய போர்வை—கஞ்சுகம் அன்று பிறிது ஒன்றே - கஞ்சுகமென்பேமாயின்; அதுவுமன்று; வேறொன்றேயாம—கஞ்சுகம் எபபுலமும் காவாமே மெய் புலம் காக்கும் - கஞ்சுகமானது எவ்விடத்தினையுங் காத்துக்கொள்ளாது தன்னுள்ளடங்கிய சரீரமாகிய இடத்தினைமாத்திரங் காவல்செய்யும—இது இப்புலமும் காவாது - இவர் கொணட போர்வையோ இச்சரீரத்தைத்தானுங் காவலசெய்யமாட்டாது. எ-று.

மனத்திலே சிறிதும் பற்றுநீங்காதவர் பூண்டு நடிக்கும் தவவேடத்தால் யாதும் பயனில்லை என்பது கருத்து.

இவர் வேடம் இவர்க்கேவது நலமென்று கருதியீந்தாரையும் காக்கமாட்டாதென தோன்ற இப்புலமுமென்றார். "நெஞ்சிற்றுறவார் துறநதார்போல் வஞ்சித்து வாழ்வாரின் வன்கணாரில" என்பது வள்ளுவர். கஞ்சுகம் - சரீரத்திற்கு ஆயுதம முதலியவைகளால் ஊறுவாராது காக்கும்படி யோர்வீரரணியுஞ் சட்டை. (கூஉ)

வஞ்சித்தொழுகுவோர்.

வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தே மென்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு.

(இ-ள்.) வஞ்சித்து ஒழுகும் மதியிலிகாள் - மனக்கருத்தொன்றாக வேடம் வேறொன்றாக வஞ்சித்து நடக்கும மதியிலிகளே!—யாவரையும் வஞ்சித்தோம் என்று மகிழன்மின் - எல்லாரையும் வஞ்சித்துவிட்டோம் நங்குற்றத்தை யாவருமறியாரென்று மகிழ்ச்சிகொள்ளாதிருங்கள்— (மகிழுதல் அறிஞர்செயலன்று.) ஒருவன் எங்கும் உளன் வஞ்சித்த காணும் என்று - ஒருவர் எவ்விடத்திலும் நிறைந்து நிற்கின்றார்; அவர் வஞ்சித்துச்செய்த செயல்களையெல்லாம் காண்பாரென்று—அஞ்சி அங்கம் குலைவது அறிவு - அவர் தண்டத்துக்குப் பயந்து சரீரம் பதறுதலே அறிஞர் செயலாகும். எ-று.

[illegible] பிறரை [illegible] மகிழ்வோர் [illegible]
மதியாவது [illegible] பொருளை நிச்சயிப்பது. கடவுள் ஒருவ ரிருக்கின்றார்; அவர் எங்கும் நிறைந்தவர்; அவரில்லாத இடமில்லை; அவர் எல்லாம் அறிபவர்; அவராலறியப்படாததில்லை என்பது முதலாகச் சொல்லப்பட்டவை களையறியாமையின் மதியிலிகள என்றார். (கூங)

### பழிமொழிபரக்கை.

மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் பரக்கும்—கழிமுடைப்
புன்புலா னாற்றம் புறம்பொதிந்து மூடினுஞ்
சென்றுதைக்குஞ் சேயார் முகத்து.

(இ-ள்) மறைவழி பட்ட பழிமொழி - இரகசியத்திலே நடந்த காரியம்பற்றி எழுந்த பழிமொழி—தெய்வம் பறையறைந்தாங்கு ஓடிப் பரக்கும் - தெய்வம் பறையடித்துப் பரம்புதல்போல் எங்கும் விரைந்து சென்று பரம்பும்—(அதற்குத் திருட்டாந்தம்) புன் புலால் கழிமுடை நாற்றம் - இழிந்த புலாலினது மிக்க துர்க்கந்தமானது—பொதிந்து புறம் மூடினும் - அப்புலால் ஒன்றினுள்ளே அடக்கிப் புறத்திலே மூடப்படுமாயினும்—சேயார் முகத்து சென்று உதைக்கும் - தூரத்திலுள்ளவருடைய முகத்திலும் போயடிக்கும். எ-று.

மறைந்துசெய்யப்படும் இழிந்தகாரியம் பலரானுமறிந்து பழிக்கப்படுமென்பது கருத்து.

மறைவழிப்பட்ட என்றது ஒழுக்கமுடையாக்கேலாததாகிய மகளிர்புணர்ச்சியை. அதுவே விரைந்து சென்று பரக்கும். "தூரத்தமங்கையர் சோரவினிற் செய்பழி வாரதைதயெங்கணும் வல்லையிற்செல்லல்போல" என்பது கந்தபுராணம். (கூச)

### நிலை தவறுதல்.

மெலியார் விழினு மொருவாற்றா னுய்ப்ப
வலியாமற் றொன்றானு முய்யா—நிலைதப்பி
நொய்ய சழக்கென வீழாவாம் வீழினும்
உய்யுமா லுய்யா பிற.

(இ-ள்.) மெலியார் விழினும் ஒருவாற்றான் உய்ப்ப - மெலியராயுள்ளவர்கள் தம நிலையினின்று தவறுவார்களாயினும் ஒருவகையால் உய்திபெறுவார்—வலியார் மற்று ஒன்றானும் உய்யார் - வலியவராயுள்ளவர்கள் தம நிலையினின்று விழுவாராயின் யாதொருவகையானும் உய்யமாட்டார்—(அதற்குத் திருட்டாந்தம்) நிலை தப்பி நொய்ய சழக்கென வீழாவாம் - நிலைதவறிக் கனமில்லாத பொருள்கள் விரைவில் விழமாட்டா—வீழினும் உய்யும் - ஓரோவழி வீழினும் பின்னர் உய்ந்துகொள்ளும்—பிற உய்யா - கனமுள்ள பொருள்கள் விழுமாயின் ஒருவாற்றானும் உய்யமாட்டா. எ-று.

உயர்வாகிய மேனிலையிலுள்ளவர்கள் அந்நிலையினின்று தாழ்வுறுவாரெனின் இருவழியானும் உயர்ந்து மேலெழும்பமாட்டார்களென்பது கருத்து.

மெலியார் வலியாரெனப் பொதுப்படக் கூறினரேனும் மெலியாரென்றது இல்லறத்தாரை எனவும், வலியாரென்றது தவநிலையினிற்பவரை எனவுங் கொள்க. செயல்களின் மென்மை வன்மை நோக்கி அங்ஙனங் கூறப்பட்டார். "இருநிராபுகழுந்தொல்சீரில்லறம்புரிந்துளோர்க்குத் - தந்தமதொழுக்கந்தன்னிற்றகு முறைதவறிறேனும்-சிந்திடுந்தீர்வுமுண்டாற்செய்தவர்க்கதனைச்சேரி- னுய்ந்திடலரிதால்வெற்பினுச்சியிற்றவறலொப்ப." எனக் கந்தபுராணங் கூறுமாறுமறிக.()

மேலோர்செய்கை.

இசையாத போலினு மேலையோர் செய்கை
வசையாகா மற்றையோர்க் கல்லாற்—பசுவேட்டுத்
தீயோம்பி வான்வழக்கங் காண்பாரை யொப்பவே
ஊனோம்பி யூன்றின் பவர்.

(இ-ள்.) மேலையோர் செய்கை - ஒன்றனை ஆக்கவேண்டினாக்கவும், அழிக்கவேண்டினழிக்கவும் வல்ல தவவலியுடைய பெரியோர் செய்கைகள் சில—இசையாத போலினும் மற்றையோர்க்கு அல்லால வசையாகா - சாத்திரவிதிக்கு இசையாதனபோலக் காணப்படினும் அவரல்லராய சிறியோர்க்கல்லாமல் பெரியோர்க்கு வசையாகக்காணப்படமாட்டா—பசு வேட்டு தீ ஓம்பி வான வழக்கம் காண்பாரை - பசுக்களை ஓமஞ்செய்து அக்கினிவளர்த்து மழைபெய்விக்க வல்ல பெரியோர்களை—ஊன ஓம்பி ஊன தின்பவர் ஒப்பவே - தமது உடம்பை வளர்த்தற்காகப் புலானுணவுண்ணும் அறமபர்கள ஒப்பாவார்களா? எ-று.

பெரியோர் செயல்களுள்ளே சில பொருந்தாதனவாகக் காணப்படினும் பிறர்க்குப் பெரும்பயன கொடுத்தலால அவற்றைப் பெரியோரிகழமாட்டாரென்பது கருத்து.

பசு-யாகத்துக்குரிய மிருகங்கள். வான்வழக்கம்-மழைபெய்தல். காண்பார்-செய்பவர். மேலையோரென்றது முனிவரை. ஓம்பி-வினையெச்சத்திரிபு. (௩௬)

பற்றியும்பற்றதுநிற்றல்.

எவரெவ ரெத்திறத்த ரத்திறத்த ராய்நின்
றவரவாக் காவன கூறி—எவரெவர்க்கும
உப்பாலாய் நிற்பமற் றெமமுடையார் தம்முடையான்
எப்பாலு நிற்ப தென.

(இ-ள்.) எவர் எவர் எ திறத்தர் - யார் யார் எவ்வெவ்வகையினராய் நிற்கின்றாரோ—அவர் அவர்க்கு அ திறத்தாராய் நின்று ஆவன கூறி - அவரவருக்கு அவ்வவ்வகையினராய் நின்று செயற்பாலனவற்றை அறியுமாறுசொல்லி—எவர் எவர்க்கும உப்பாலாய் எமமுடையார் - யாவருக்கும் புறத்தராய் ஏமமையாளுந் தன்மையுடையராகிய ஞானிகள்—தமமுடையான் எப்பாலும நிற்பது என நிற்ப - தமமை

யுடைய கடவுள் சேர்ந்தும் சேராமல் எவ்விடத்தும் நிற்பதுபோலத் தாமும் பற்றின்றி நிற்பர். எ-று

ஞானிகளாகிய பெரியோர் உலகத்தாரோடு சேர்ந்து நின்றாரேனும் பற்றில்லாதவராய் நிற்பரென்பது கருத்து. (கூஎ)

## மெய்யுணர்ந்தார்.

மெய்யுணர்ந்தார் பொய்ம்மேற் புலம்போக்கார் மெய்யுணர்
கைவருதல் கண்ணும் புலங்காப்பார்—மெய்யுணர்ந்தார் [சசி
காப்பே நிலையாப பழிநாண னீள்கதவாச்
சேர்ப்பார நிறைத்தாழ் செறித்து.

(இ-ள்) மெய்யுணர்ந்தார் பொய்மேல் புலம்போக்கார் - உண்மைப்பொருளை யுணர்ந்தவர்கள் பொய்ப்பொருள்களின்மேலே தம்முடைய பொறிகளைச் செலலவிடமாட்டாராயினும—மெய்யுணர்ச்சி கைவருதல கண்ணு - மெய்யுணர்வு நீஙகாது வசபபட்டிருததலைக் கருதி—மெய்யுணர்நதார காபபே நிலையா-மெயஞ்ஞானிகளுடைய காவலே நிலையாகவும—பழி நாணல் நீள் கதவா - பழிக்கு நாணுதலே நீண்ட கதவாகவுங்கொணடு—புலம சேரபபார் - பொறிகளைச் சேர்ப்பாராய்—நிறை தாழ் செறித்து - நிறையென்னுந் தாழக்கோலை இறுக்கி—காப்பார - காத்துக்கொள்ளுவார். எ-று.

மெய்ப்பொருளையுணர்நதவர் அதனையே இடைவிடாது பாவனைசெய்வாரென்பது கருதது.

மெய்யுணர்ந்தார் காவலாவது மெய்ஞ்ஞானந் தலைப்படினும் ஓரோவழிப் பிராரதத வாசனையால் வரும் மறவியை நீககி ஞானததைப் பிரகாசிப்பிததல். இதுபற்றியே சிவஞானபோததததும் "அன்பரொடுமரீஇ" என்றார். நிறை-மனத்தை வேறொன்றில விடாது நிறுத்துதல். (கூஅ)

## பேரின்பம்.

கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல—முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்விற் றோன்றுவதே யின்பம்
இறந்தவெலாந் துன்பமலா தில.

(இ-ள்.) கற்று துறைபோய காதலற்கு - கற்றுற்பாலனவாகிய நூல்களையெலலாம கற்றுணர்ந்து அதற்குத்தகநின்ற நாயகனுக்கு—கற்பினாள் பெற்று கொடுத்த தலைமகனபோல் - கற்பினையுடைய மனைவி பெற்றுக் கொடுத்த சிரேட்டகுமாரனைப்போல—முற்ற துறந்தார்க்கு மெய்யுணர்வில தோன்றுவதே இன்பம - இருவகைப்பற்றினையும் முற்றுவிட்டவர்க்கு மெய்யுணர்வின்கணணே தோன்றுகின்ற ஆனந்தமே இன்பமாகும்—இறந்த எலாம் துன்பம அலாது இல - இஃதொழிந்த உணர்வின்கண்ணே தோன்றுவன எல்லாம துன்பமன்றி வேறிலலை. எ-று.

[illegible]

... இருவகைப்பற்றுவன அகப்பற்று, புறப்பற்று என்பன. அகப்பற்று - யாக்கையின்கண்ணுள்ள விருப்பு. புறப்பற்று - செல்வத்தின்கணுள்ள விருப்பு. ()

## முத்திபெற்றோர்.

கற்றுங் கறிந்தடங்கித் தீதொரீஇ நன்றாற்றிப
பெற்றது கொண்டு மனந்திருத்திப்—பற்றுவதே
பற்றுவதே பற்றிப பணியறநின் றொன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச் சென்றார்.

(இ-ள்) கற்றுங்கு அறிந்து - ஞானநூல்களைக் கற்றவாறே அவ ற்றாற்பெறப்படும் மெய்ப்பொருளை உணர்ந்து—அடங்கி தீது ஒரீஇ - செருக்கின்றி அமைந்து காமம கோபம முதலிய தீங்குகளை விட்டு— நன்று ஆற்றி - கொலலாமை வாய்மை முதலிய நறசெயல்களைச் செ ய்து—பெற்றது கொண்டு மனம் திருத்தி - பெறற ஞானததினாலே இருவகைப்பற்றும் நீங்க மனத்தை ஒருவழிப்படுத்தி—பற்றுவதே பற் றுவதே பற்றி - பற்றப்படுவதாகிய வீட்டுநெறியைப் பறறிநிற்பதாகிய இயோகசமாதிகளை மனத்துட்கொணடு—பணி அற நின்று - தன்செய லற்றின்று—ஒன்று உணாந்து நிறபாரே நீள் நெறி சென்றார் - ஏக வஸ்துவாகிய பிரமத்தினையுணர்ந்து அதன் செயலாய் நிற்பவரே முத் திநெறியிற் சென்றவராவர். எ-று.

ஞானநூல்களைக் கற்று இயமம் முதலியவைகளைச் செய்து பிரமப்பொருளை யுணர்ந்து நிற்பவரே முததிக்குரியராவரென்பது கருத்து.

இயமம் முதலியனவாவன: இயமம், நியமம், இருப்பு, பிராணயாமம், மன வொருக்கம், தாரணை தியானம், சமாதி என்னும் யோகவுறுப்புக்கள். இயமமா வது கொல்லாமை, வாய்மை முதலியன. நியமமாவது பெற்றதறகுவத்தல், கற் றவையாற்றல் முதலியன. இருப்பு-ஆசநம். பிராணயாமம்-பிராணவாயுவைத் தடு த்தல். மனவொருக்கம்-மனததினைப பொறிவழிச்செலல் விடாது ஒருவழிப்படு த்துநிறுத்தல். தாரணையும் இதனுளடஙகும. தியானமாவது நிறுததிய அம்மன த்தினை நிலைகுலையாது முதறபொருளோடிணைத்தல. சமாதியாவது அமமுதற் பொருளோடு தான் அதுவென வேறுகாது நிற்றல. (௪00)

## முடிந்தபொருள்.

ஐயந் திரிபின றளந்துத் தியிற்றெளிந்து
மெய்யுணர்ச்சி கண்விழிப்பத் தூங்குவார்—தம்முளே
காண்பதே காட்சி கனவு நனவாகப்
பூண்பதே நீக்க பொருள்.

[illegible] யோகநித்திரையிற் காணும் [illegible]
தே முடிந்த பொருளாகும், எ-று.

மெய்யுணர்வு பெற்று முதற்பொருளாகிய பிரமத்தோடொற்றுமையுற இடைவிடாது பாவனை செய்வோர் அதுவாக எல்லாவற்றையுங் காண்பதே முடிந்தபயன் என்பது கருத்து.

ஐயமாவது பல்தலையாயவுணர்வு. அஃதாவது மறுபிறப்பும், இருவினைப்பயனும், கடவுளும் உளவோ இலவோவென ஒன்றிற்றுணிவுபிறவாது நிற்றல். விபரீதமாவது மயக்கவுணர்வு. அது இருவினைப்பயனுங், கடவுளுமில்லை எனவும், மற்றுமித்தன்மையவுஞ் சொல்லும் மயக்கநூல் வழக்குகளை மெய்ந்நூல் வழக்கெனத் துணிதல. அளவையாவன பொறிகளாற் காணுங் காட்சியும், குறிகளானுணரும் அநுமானமும், கருததாமொழியாகிய ஆகமமுமென மூன்றுமாம். பிறவிவற்றுளடங்கும். பொருந்துமாறுவது இது கூடும இது கூடாதெனத் தன்கண்ணே தோன்றுவது. கனவு நனவாகப் பூண்டலாவது யோகநித்திரையிற் காணப்பட்ட முதற்பொருள் ஒன்றுமேயன்றி மெய்
காணப்பெறுமை.

மெய்யுணர்ச்சி என்பதற்குப் பதிமுதலிய பொருள்களை உள்ளவாறுணர்ந்த அறிவு எனவும், கண்விழிப்ப என்பதற்கு எதிர்முகமாக நோக்காது தாமதுவாகப் பார்க்க எனவும், தூங்குவார் என்பதற்கு முதற்பொருளின்கண்ணே மனத்தை ஒடுக்கிக் கிடப்பவா எனவும், தமமுள்ளே காணபது என்பதற்கு அம்முதற்பொருளோடொற்றுமையுற இடைவிடாது பாவித்தல் எனவும் கூறுவாரும் கண்விழிப்புத்தூங்குவாா என்பதற்கு பரமான்ம விஷயத்திலே விழிப்பும், இவ்வுலகவிஷயத்திலே நித்திரையுமுடையவா எனக் கூறுவாருமுளா. (கஉ)

முற்றிற்று.